


உ

ஸ்ரீ சற்குருவே நமா.

விருத்தாசலத்தில் ஸ்ரீ பெரியநாயகியார் வரப்பிரசாதியாய் எழுந்தருளியிருந்த

ஸ்ரீ குமாரதேவர்

திருவாய் மலர்ந்தருளிய

# அத்துவிதவுண்மை.

மூலமும்,

இதற்கு திருத்துருத்தி இந்திரபீடங்கரபாத்திர சுவாமிகளாதீனம் பிறைசை

அருணாசலசுவாமிகள்

மாணாக்கர் பாரிப்பாக்கம்

முனியப்பசுவாமிகள்

இயற்றிய உரையும்.

சேலம் ஜில்லா சிவில் கோர்ட் வைக்கீல்

அப்பாசாமிபிள்ளையவர்களால்

சேலம்:

சுதேசாபிமானி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டன.

௧௮௮௩-௵ நவம்பர்-௴ — சுபானு-௵ ஐப்பசி-௴.

இதின் விலை அணா ௪.

வேண்டுபவர்கள் மேற்படி அப்பாசாமிபிள்ளையவர்களிடத்தில் வாங்கிக்கொள்ளலாம்.

சிவமயம்.

## சாற்றுகவிகள்.

—:o:—

சேலம் டிஸ்திரிக்ட்டு கோரட்டு
வக்கீலாகிய அத்விதானுபவி அப்பாசாமி பிள்ளை அவர்கள் இயற்றிய
ஆசிரிய விருத்தம்.

பெரியநாயகியினியவருளடைந்த
குமாரகுருப்பெம்மானன்பர்க்
குரியதாமத்துவிதவுண்மையிதுவாகுமென
வுரைத்தநூற்குப்
பிரியமாயதிசுளுவாயுணர்ந்துய்ய
முனியப்பபெருமானெங்கோன்
சரியானவுரைசெய்துதந்தருளினன்மிக்க
தயவினாலே
முத்திநிலைதனையுணர்ந்தமுனியப்பதேசிகனெம்
முதல்வனன்பாய்
அத்துவிதவுண்மைநூற்கதிதெளிவாநல்
லுரைசெய்தளித்தானன்பர்
பத்தியுடனிதையுணர்ந்தேயனுட்டானஞ்
செய்துவரிற்பரமானந்த
சுத்தசுகந்தனையுள்ளங்கைக்கனிபோற்றேர்ந்
துலகிற்சுகிப்பர்தாமே.

---

இஃது இந்நூலுரையாசிரியர் மாணுக்கரும், செவ்வாய்ப்
பேட்டை டவுன்ஸ்கூல் ஏட்மாஸ்டருமாகிய துரைசாமி பிள்ளை இயற்றிய
எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஈடணையாலின்னல்செறிந் திங்குழலுமாந்த
ரிருமையுமற்றேகபரி பூரணமாயிலங்கும்
வீடதனைப்பெற்றுய்ய விருத்தகிரியம்மை
வியனருளையுற்றத்துவித வுண்மையென்னுந்
தோடமறுமெஞ்ஞானநூல் தொகுத்திங்களித்தான்
றுகளறுசற்குமாரகுரு தோன்றனனிமாயைக்
காடதனைக்கடந்த சுகபோதமுனியப்ப
காருண்யனதற்களித்தா னுரையினையுட்கனிந்தே.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீகுமாரதேவரருளிச்செய்த

# அத்துவிதவுண்மை.

மூலமும்-உரையும்.

ஆழத்துப்பிள்ளையார்துதி.

பொங்கரவதுவுமிந்தும் புரிசடையதனிற்சேர்த்தி
அங்கரந்தனிலிடத்தி லழகியமானையேந்தும்
சங்கரன்சேயெம்பாசந் தகர்த்தைந்துமொருங்கறுக்க
ஐங்கரங்கொண்டவாழத் தையனைவணக்கஞ்செய்வாம்.

இதன்பொருள்.—சீறுகின்ற சர்ப்பத்தையும் மூன்றாம் பிறையையும் கட்டப்பட்ட சடையினிடத்தில் வைத்து அழகியகையில் மானையும் இடப்பாகத்தில் அழகு பொருந்திய உமயவளையும் தாங்குகின்ற பரமசிவனது திருக்குமாரராகி எம்முடைய பந்த பாசங்களை கெடுத்து பஞ்ச மலங்களையும் வேரோடுகளைய ஐந்து கரத்தோ டெழுந்தருளி யிருக்கின்ற பாதாள விநாயகரை வணங்குவாம்.—என்றவாறு.

பெரியநாயகியார்துதி.

ஆண்டகுருவே கண்மணியே யருளே நீ நானென்றுகப்
பூண்டவடிவை யென்னுடைய புந்தியதனு ணின்றுணர்த்தி
ஈண்டப்படியே யென்னுவி லிருந்து முரைக்கவேண்டு நீ
நீண்டமாலுமயன் போற்று நிமலவிருத்த நாயகியே.

(இ-ள்.)—நெடுமோலும் பிரமாவும் துதிக்கின்ற களங்கரகிதமாகிய விருத்தாம்பிகையே ஆட்கொண்டகுருமூர்த்தமே விழிமணியே திருவருளே லோகமாதாவாகியதேவரீர் நீயென்னும்பிரமமும் நானென்னுங்கூடஸ்தனும் அத்துவிதமாகஅனுபவித்த அயிக்கியானுசந்தானத்தை அடியேனது அறிவினுள் இருந்து அறிவித்தருளி புறத்தில் அதுபோலவே என்வாக்கில்நின்றும் இந்நூற்கூறியருளவேண்டும்.—எ-று.

## நூல்.

மேலாஞ்சதுட்டசாதனங்கண் மேவிநிறைந்தபேர்க்குரைக்கின்
மேலாமதுநாமெனத்திடமாய் விளங்குமவையில்லாதவர்க்கு
மேலாம்பரமன்மான்மழுவாய் விளங்கியுரைத்தும்விளங்காது
மேலாஞ்சாதனங்கள்வர மேவவேண்டுஞ்சாதுசங்கம்.

(இ-ள்.)—உயர்வாகிய சாதனசதுஷ்டயம் பொருந்தி பூரணமானபக்குவர்களுக்கு எவைக்குமேலாகிய பிரமமேகூடஸ்தனென்று உபதேசித்தமாத்திரத்தில் உறுதியாய் பிரகாசிக்கும் அச்சாதனங்களின்றிய அபக்குவர்களுக்கு சிரேஷ்டமாகிய சிவன் மான்மழுமுதலியவற்றேடு பிரத்தியக்ஷமாய்வந்து உபதேசித்தபோதிலும் பிரகாசியாது, மேன்மையாகிய நான்குசாதனங்களும் உண்டாக சற்சங்கத்தோடு பழகவேண்டும்.—எ-று. க

உண்டாய்த்தோன்றிரமித்திடுத லொருநம்வடிவேயுருநாமம்
கண்டேயிடன்மாத்திரமல்லாற் கருதிப்பார்க்கின்வேறில்லை
பண்டேமுதலித்தகைவாகும் பலவாய்க்காணன்மைத்திரிவால்
விண்டாற்றிரிவையேகமாய் விளங்குநமதுவடிவமே.

(இ-ள்.)—ஒப்பற்ற நமது சச்சிதானந்தஸ்வரூபமே இருந்து விளங்கி ஆனந்திப்பது நாமரூபமோவெனின் தோற்றமாத்திரமேயல்லாமல் நினைத்துப் பார்க்குமிடத்தில் வேறேயில்லை அனுதிகாலமே இந்தச்சுவானுபூதியாகும் (இங்கனமிருக்க) நானுவாகத்தோற்றுவது அஞ்ஞானவிபரீதத்தினுலாம் அவ்விபரீதத்தைவிட்டால் நமதுசொரூபமே அத்துவிதமாய் பிரகாசிக்கும்.—எ-று. உ

எந்தச்சத்திலசத்தாகு மிந்தவுலகுசத்தாகும்
எந்தச்சித்திலசித்தாகு மிந்தவுலகந்தான்விளங்கும்
எந்தவின்பிற்றுன்பாகு மிந்தவுலகமின்பாகும்
அந்தச்சச்சிதானந்த மதுவேநமதுவடிவாகும்.

(இ-ள்.)—இந்தவுலகம் எந்தச்சத்தினிடத்தில் அநர்தமாகுமோ அதுவே சற்சொரூபமாம் இவ்வுலகம் எந்தச்சித்தினிடத்தில் சடமாகுமோ அதுவேசிற்சொரூபமாம் இவ்வுலகம் எந்தஆனந்தத்தில் துக்கமாகுமோ அதுவேயானந்தசொரூபமாம் அங்ஙனமான அஸ்திபாதிப் பிரியமே நமது சொச் சொரூபமாம்.—எ-று. ஙூ

எல்லாநாமேயெனவறிந்தா லெஃதைநினைவானினைத்திடுதல்
சொல்லாலெஃதையுரைத்திடுத லெழிலாலெஃதைச்செய்திடுதல்
நில்லாவுலகைவேறெனவே நினைத்தலுரைத்தலெழில்புரிதல்
நல்லாரனைத்துநாமெனவே நாடாரவையினொன்றையுமே.

(இ-ள்.)—சர்வமுநாமேயென்று சுவானுபவமாகத்தெரிந்தால் எதை நினைவினால்நினைப்பது வார்த்தையால் எதை வசனிப்பது கிரியையால் எதை செய்வது (ஆதலால்) அசத்தாகிய பிரபஞ்சத்தை அன்னியமென்று நினைவதும் வசனிப்பதும் தொழில்செய்வதுமாகிய அக்கிரியைகளினொன்றையாவது சத்துக்கள்சர்வமுநாமேயென்று துவிதமாகக்குறியார்.—எ-று. ௪

நானுவாகத்தோன்றியிடு நாமரூபமிவையனைத்தும்
நானுவல்லவொருநாமே நாடிமகிழுஞ்சித்திரங்கள்
தானுஞ்சித்தாகாசத்திற் றன்னைத்தானேதான்றானே
தானுங்கருவியினில்வரைந்து தானேநோக்கிமகிழ்ந்திடுதல்.

(இ-ள்.)—பலவாக காணப்படுகின்ற நாமரூபங்களாகிய விவையெல்லாம் பலவல்ல ஒப்பற்றநமது சொரூபமே கண்டு களிக்கின்ற விசித்திரங்களியாதெனின் தற்சொரூபமாகிய ஞானகாயத்தில் தற்சொரூப விலாசத்தையே தனக்குத்தானே தன்மயமாகிய கருவிப்பொருளில் எழுதி தான்தானே பார்த்து ஆனந்தித்தலாம்.—எ-று. ௫

தங்கர்தானேபணிதியாய்ச் சாற்றும்விதமாய்விளங்குதலின்
அங்கமுதலாஞ்சகங்களா யறிவேவிளங்குமயலில்லை
இங்கங்கென்றேபங்கொன்று மில்லையகண்டவறிவொன்றே
துங்கவறிவுதோன்றளவுந் தோன்றுநானுவிதரூபம்.

(இ-ள்.)—பொன்னொன்றே ஆபரணங்களாகி சொல்லுகின்ற பலநாமங்களையுடைத்தாகி பிரகாசிப்பதுபோல ஆத்மசொரூபமே சரீரமுதலாகிய பிரபஞ்சங்களாய் பிரகாசிக்கும் வேறில்லை இவ்விடமவ்விட மென்று ஒருபிரிவுமில்லை அகண்டாகாரஞானம் ஒன்றேயாகும் அப்பரிபூரனஞானமானதுவியாபிக்குமட்டும் பலவகைப்பட்டதிரிசயங்கள் பிரகாசிக்கும்.—எ-று. ௬

இன்னானன்னானிதுவதுவென் றியம்புமுலகம்வேறன்று
தன்னானந்தலீலையினாற் றன்னைத்தானேதன்னிடத்தில்
அன்னானின்னானதுவிதுவென் றனந்தவிதமாய்த்தான்பகுத்தே
உன்னாநின்றுதானடிக்கு மொருகூத்தெனவேயியம்பவரால்.

(இ-ள்)—இவ்விதப்பட்டவன் அவ்விதப்பட்டவன் இந்தவஸ்து அந்தவஸ்து வென்று சொல்லுகின்ற பிரபஞ்சமானது அன்னியமல்ல தனதுசுகானந்தலீலா விபூதியினல் தனதுசொச் சொரூபத்தை தான்தானே தனது சந்நிதானத்தில் அவ்விதப்பட்டவன் இவ்விதப்பட்டவன் அந்தப் பொருளிந்தப்பொரு ளென்று நானுவகையாய் தானேபிரித்து சங்கற்பித்துநின்று தான்செய்கின்ற ஓர்நடிப் பென்று சத்துக்கள்சொல்லுவார்கள். ஆல்-அசை.—எ-று. எ

தங்கமொன்றேபணிதிகளிற் சாற்றும்விதங்கள்வெவ்வேறு
தங்கவிலக்கணமுமன்று தங்கம்விடவும்வேறன்று
தங்கமழியாப்பணியழியிற் சாற்றுமிந்தத்தகைமைபோல்
எங்குநிறைசித்தாநம்மி லிலகுமிந்தவுலகமே.

(இ-ள்.)—பொன்னென்றே ஆபரணங்களில் சொல்லும்பெயர்கள் வேறு வேருகும் (அங்ஙனங்கூறுதல்) சுவர்ணலட்சணமுமல்ல (ஆயின்) சுவர்ணத்தை யல்லாமலும்வேறல்ல ஆபரணமென்பதழிந்தாலும் சுவர்ணம்கெடாது சொல் லுகின்ற இத்தன்மையைப்போல எந்தவிடத்திலும் நிறைந்துள்ள அறிவுசொ ரூபமாகிய நம்மிடத்தில் இவ்வுலகமானது பிரகாசிக்கும்.—எ-று. அ

தானுண்டாகிலுலகுண்டாந் தானுண்டாகிலுயிருண்டாம்
தானுண்டாகிற்பரமுண்டாந் தானுண்டாகில்வீடுண்டாம்
தானுண்டாகிற்பஞ்சதொழிற் றனுண்டாகுந்தனையன்றித்
தானுண்டோமற்றவையதனுற் றனேயனைத்தும்வேறில்லை.

(இ-ள்.)—தானுண்டானல் உலகமுண்டாகும் தானுண்டானல் சீவனுண் டாகும் தானுண்டானல் ஈசுரனுண்டாகும் தானுண்டானல் மோட்சமுண்டா கும்தானுண்டானல் பஞ்சகிருத்தியங்கள்தானேயுண்டாகும் தன்னையல்லாமல் வேறுபொருள்கள்தானேயுள்ளதோ அவ்வனுபவத்தினல் சர்வமும்தனதுசொ ரூபமே வேறேயில்லை.—எ-று. கூ

மந்தவிருளிற்கயிறரவின் மாறுபாடாய்த்தோன்றுதல்போல்
இந்தவுலகுமுயிர்களுமவ் வீசன்றனுமுயிரடையும்
பந்தம்வீடுமீசன்செய் பஞ்சகிருத்தியங்களுமே
அந்தநமதுசொரூபத்தி லாரோபிதமாய்நின்றிலகும்.

(இ-ள்.)—மக்கினமான அந்தகாரத்தில் கயிறனது சர்ப்பத்தைப்போல வேறுபாடாகி தோற்றுந்தன்மை போல் இந்தச்சகத்தும் சீவர்களும் அந்த

ஈசுரனும் சீவர்களடைகின்ற பந்தமும்முத்தியும் ஈசுரனாற்செய்யப்பட்ட ஐந்தொழில்களும் அழகிய நமதாத்மசொரூபத்தில் அத்தியாசமாய் பிரகாசிக்கும்.—எ-று. ௧௦

அனந்தவிதமாய்க்கீற்றையுடைத் தாகுஞ்சிலையொன்றதைப்பார்க்கில்
அனந்தவிதமாய்த்தோன்றியிடு மந்தக்கீற்றுஞ்சிலையொன்றே
அனந்தமுடையநம்மிடத்தி லகிலமந்தத்தகைமைபோல்
அனந்தவிதமாய்த்தோன்றியிடு மறிவேயன்றிவேறில்லை.

(இ-ள்.)—அளவில்லா வகையாய் இரேகையை உடையதாகிய ஒரு சிலையுண்டு அதைப்பார்க்குமிடத்தில் அளவில்லாவகையாய் காணப்படும் அவ்விரேகையும் சிலையும் ஒன்றேயாம் அழிவின்மையையுடைய நமதுசொரூபத்தில் பிரபஞ்சமானது அத்தன்மைபோல அளவில்லாவகையாய் காணப்படும். (அங்ஙனந்தோற்றினும்) அறிவுசொரூபமேயன்றி வேறேயில்லை.—எ-று. ௧௧

மையேமிகுநித்திரைமோக மயக்கிற்கனவைக்கனவதனில்
பொய்யேயெனத்தோன்று தவர்க்கேபுகலவேண்டுநனவுணர்ந்தோர்
மெய்யேபோலத்தோன்றிநனி விளங்குஞ்சகஞ்சற்குருவன்றிப்
பொய்யேயெனத்திட்டமதாகப் பொருந்தத்தோன்றுதொருக்காலும்.

(இ-ள்.)—இருள்மிகுந்த நித்திராமோக மயக்கத்தினால்வருகின்ற சொப்பனத்தை அச்சொப்பனாவஸ்தையில் மித்தையேயென்று கண்டறியாதவர்களுக்கு சாக்கிரத்தை யறிந்தவர்கள் சொல்ல வேண்டும் சத்தியம்போல்தோற்றி நன்றாக பிரகாசிக்கின்ற உலகமானது சற்குருவினாலல்லாமல் மித்தையேயென்று உறுதியாக பொருந்தும்படி ஒருக்காலமும் தோற்றமாட்டாது.—எ-று. ௧௨

கனவினனவேயுணர்ந்துயர்ந்தோர் கனவென்றொருவற்குரைத்திடினும்
கனவிதெனவேகாணாது காணுந்தனக்கென்றறிவுதிக்கின்
வினவிலதுபோனனவையுந்தம் விகற்பமெனவேயுரைத்திடினும்
நினைவினிசமாய்க்கொள்ளாது நிசமாந்தனக்கென்றறிவுதிக்கில்.

(இ-ள்.)—சொப்பனத்தில் சாக்கிரத்தையறிந்து மேலானவர்கள் சொப்பனமென்று ஒருவனுக்கு சொன்ன போதிலும் இது சொப்பன மென்று காணமாட்டான் அவனுக்கே அறிவுதயமானால் காண்பன் கேட்குமிடத்தில் அத்திருஷ்டாந்தம்போல சாக்கிரத்தையும் தனதுமனோவிகற்பமென்று சொன்னபோதிலும் புத்தியில் உண்மையாய் பிரகாசியாது தனக்கே ஞானானுபவமுதயமானால் உண்மையாகப்பிரகாசிக்கும்.—எ-று. ௧௩

கனவைக்கனவென்றுணர்ந்தவனைக் கனவினியாரெனவொருவன்
வினவிலவனுநனவதனில் விளங்குந்தனையேயுரைப்பனதின்
நனவைநினைவென்றுணர்ந்தவனை நனவினியாரெனவொருவன்
வினவிலவனுமகண்டமாய் விளங்கும்பிரமமேயென்பன்.

(இ-ள்.)—சொப்பனத்தை சொப்பனமென்று அறிந்தவொருவனை சொப்பனத்தில் நீயாவனென்று ஒருபுருடன் கேட்குமிடத்தில் அப்புருடனும் சாக்கிராவஸ்தையில்பிரகாசிக்கின்ற தன்னையே சொல்லுவன் அத்திருஷ்டாந்தம்போல சாக்கிரத்தை மனோசங்கற்ப மென்று அறிந்தஞானியை சாக்கிரத்தில் நீயாவனென்று ஒருபுமான் கேட்குமிடத்தில் அந்தஞானியும் பரிபூரணமாய் சதோதயமாகப்பிரகாசிக்கின்ற ஆத்மாவேஎன்றுசொல்லுவன்.—எ-று. கசு

நனவிற்குறோரிடத்திருக்க நவினித்திரையின்மோகத்தால்
கனவிற்றேசாந்தரமுதலாய்க் காணுமனேகவிதமஃதின்
வினவினுமுமகண்டமாய் விளங்கியசையாதிருந்திடவே
கனவிம்மாயைதனில்விதமாய்க் காணுந்தேசாந்தரமுதலாய்.

(இ-ள்.)—சாக்கிரத்தில் ஒருவன் ஒருஸ்தானத்திலிருக்க சொல்லுகின்ற நித்திராமயக்கத்தினால் சொப்பனத்தில் தேசமாதியாக நானுவகையும் தோன்றும் அத்திருஷ்டாந்தம்போல கேட்குமிடத்தில் யாமும் பரிபூரணமாய் பிரகாசித்து சலனமின்றி இருக்க மகத்தாகிய இந்தமாயாமோகத்தினுல் தேசநாடுகளாதிய நானுவிதமாய் ஆரோபிக்கும்.—எ-று கரு

கனவிற்றோன்றும்பொருளெல்லாங் கனவிற்கனவென்றுணர்ந்தக்கால்
நனவின்விவகாரந்தோன்று நவிற்றுமிந்தத்தகைமைபோல்
நனவிற்றோன்றுஞ்சகமனைத்து நமதுசங்கற்பமதெனவே
நனவிற்றோன்றியிடுங்காலை நமதுசொரூபந்தோன்றியிடும்.

(இ-ள்.)—சொப்பனத்தில் திரிசியமாகின்ற சகலவஸ்துக்களும் சொப்பனத்திலேயே சொப்பனமென்று அறிந்தவிடத்தில் சாக்கிரத்தின் விவகாரமானதுகாணப்படும் சொல்லுகின்ற இத்திருஷ்டாந்தம்போல சாக்கிரத்தில்காணப்படுகிற சகலபிரபஞ்சங்களும் நம்முடைய சங்கற்பமென்று அச்சாக்கிரத்தில்தானே காணப்படுமிடத்தில் நமதறிவுசொரூபம் காணப்படும்.—எ-று. கசா

மனத்திற்கனவிற்கனவெனவே மதிக்கினந்தவிவகாரத்
தனத்தமுறினுங்கலக்கமுரு னதிகமுறினுமகிழ்ச்சியுருன்
மனத்தினனவில்விவகாரமயங்கி நீங்காதிருப்பனதின்
கனத்தசகஞ்சங்கற்பமெனக் கண்டாற்றனைநீங்காதிருப்பர்.

(இ-ள்.)—சொப்பனத்தில் சொப்பனமேயென்று மனதில் அறிந்தால் அவ் விவகாரத்தில் அழிவுவந்தாலும் துன்பப்படான் விருத்தியானாலும் சந்தோஷப்படான் மனதில் சாக்கிரவிவகாரத்தினால் சொப்பனவிவகாரத்தில் மயங்கிப்போகாமல் சுகமாயிருப்பன் அத்திருஷ்டாந்தம்போல பெரிதானஉலகம் சங்கற்பமாத்திரமேயென்று பார்த்தால்தற்சொரூபத்தைவிடாமல்சத்தாசாமானியமாத்திரமாய் பிரகாசிப்பார்கள்.—எ-று. கஎ

சிங்காதனத்தில்வீற்றிருக்குஞ் சிறப்பாரரசுங்கனவடைந்து
மங்காப்புலைத்தன்மையைமேவி வருந்துவோன்றன்னனவுணரின்
அங்காஞ்சோகமோகமெலா மந்தக்கணமேநீங்குமதின்
இங்காஞ்சிவத்துவமோக மிரியுந்தனைத்தேர்ந்தக்கணமே.

(இ-ள்.)—சிம்மாதனத்தில் எழுந்தருளியிருக்கும் சிறப்புப்பொருந்திய அரசனும் சொப்பனமடைந்து குறைந்த நீசத்தன்மையைபொருந்தி வருந்துமவ்வரசன் தனதுசாக்கிரத்தை அறிந்தால் அச்சொப்பனத்தில் உண்டாகிய சோகமோகங்களெல்லாம் அப்பொழுதே போகும் அத்திருஷ்டாந்தம்போல இத்தேகாதிபிரபஞ்சத்தில் உண்டாகிய சிதாபாசத்வ மோகமானது தனதுநிஜசொரூபத்தையறிந்தமாத்திரத்தில்நாசமாம்.—எ-று. கஅ

கனவைக்கனவென்றுணர்ந்தக் கனவினனவைநோக்கிடினக்
கனவையொழிந்தவக்கணமே காணுநனவில்விழிக்குமதின்
நனவைச்சங்கற்பமென்றுணர்ந்து நனவிற்றனையேநோக்கியிடின்
நனவையொழிந்துவக்கணமே நமதுசொரூபத்தேவிழிக்கும்.

(இ-ள்)—சொப்பனத்தை சொப்பனமென்று அறிந்து அச்சொப்பனவஸ்தையில் சாக்கிரத்தை பார்த்தால் அச்சொப்பனத்தை நீங்கிய அந்தக்ஷணமே காணப்படுகின்ற சாக்கிரத்தில் விழிப்பன் அத்திருஷ்டாந்தம்போல சாக்கிரத்தை மனநினைவென்று அறிந்து சாக்கிரத்தில் தனதாத்மசொரூபத்தையேபார்த்தால் தேகாதிபிரபஞ்சவாசனுமயமாகிய சாக்கிராவஸ்தைநீங்கி நமது அறிவானந்தசொரூபத்தில் அப்பொழுதே விழிப்பன்.—எ-று. கக

கனவையொழிந்துநனவதனைக் கண்டார்நனவினின்றுபினக்
கனவைநோக்கியிடின்முன்னங் கண்டபடியேதோன்றுமதின்
நனவையொழிந்துதன்சொரூபநன்கு யுணர்ந்தோரதினின்று
நனவைநோக்கிநினைவுகொடு நாடின்முனம்போற்றோன்றியிடும்.

(இ-ள்.)—சொப்பனநீங்கி சாக்கிரத்தை கண்டவர்கள் சாக்கிரத் திருந்து பின்பு அச்சொப்பனத்தைப்பார்க்குமிடத்து முன்பார்த்ததுபோலவே காணும்

அத்திருஷ்டாந்தம்போல சாக்கிரநீங்கிதனதாத்மசொரூபத்தை ஐயந்திரிபின்றி அறிந்தவர்கள் அவ்வறி வானந்த சொரூபத்தி னின்று சாக்கிரத்தைக் கண்டு மனோ வாசனையைக் கொண்டு பார்க்கு மிடத்து முன் போலவே காணப்படும்.—எ-று. ௨0

உறக்கமோகமதிற்கனவி லுலகமுயிர்கள்விவகாரம்
சிறக்குமெய்போற்றோன்றியதைத் தேரிற்பொய்யாய்விடுமெஃதின்
மறக்குமாயாமோகமதின் மாசார்பந்தம்வீடதெனப்
பிறக்குமவைகடமைத்தேரிற் பேசும்பொய்யாய்ப்போய்விடுமால்.

(இ-ள்.)—நித்திராமோகத்தினாலுண்டாகிற சொப்பனத்தில் உலகமும் சீவவிவகாரங்களும் மேலாகிய யதார்த்தம்போல காணப்பட்டு அதனிஜசொரூபத்தை விசாரிக்குமிடத்து மித்தையாகிப்போம் அத்திருஷ்டாந்தம்போல மறைப்பையுடைய மாயாமோகவிலாசத்தினால் குற்றம்பொருந்திய பெத்தமுத்தியென்று உண்டாகும் அப்பெத்தமுத்திகளை விசாரிக்குமிடத்தில் சொல்லுகின்ற மித்தையாய் போகும்.—எ-று. ௨௧

ஒருவனுளதாகையிற்கனவுமுண்டா முறக்கமோகமதின்
ஒருவனிலதாகையிற்கனவு மொருகாலையினுமிலதாகும்
சொருபாமதுண்டாகையினாற் றோன்றுநானாவிதசகம்
சொருபமிலதேலில்லையதனாற் றோன்றுமனைத்துஞ்சொருபமே.

(இ-ள்.)—ஒருபுருடன் உண்டாயிருக்கில் நித்திராமோகத்தில் சொப்பனமும் உளதாம் ஒருபுருடன் இன்றாயிருக்கில் சொப்பனமும் ஒருகாலத்திலும் இல்லாததாம் நமதுசொரூபம் உண்டாயிருக்கையினால் பலவிதசகங்கள் உண்டாகும்நமதறிவானந்தசொரூபம் இல்லாவிட்டால் இல்லையாகும் அவ்வனுபவத்தினால் காணப்படுகின்றசகலமும் நமதுசொரூபமேயாம்.—எ-று. ௨௨

படிகத்தடுத்தநிறங்களதிற் பத்திபாயுமந்நிறமாய்ப்
படிகமாகிநீங்கியிடும் பகருமிந்தத்தகைமைபோல்
முடிவினமதுசொருபத்தின் மோகஞ்செயுமாயையிற்றோன்றும்
முடிவில்பந்தம்வீடதுமில மொழியுமாயையென்பதுமில்.

(இ-ள்.)—ஸ்படிகத்தில் அனுசரித்த வன்னங்கள் அப்படிகத்தில் பிரதிபலிக்கும் அவ்வவ்வண்ணமாகியும் சுயம்படிகமாகியே அவ்வன்னங்கட்கெல்லாம் அதிஷ்டானமாய் நீங்கிநிற்கும் சொல்லுகின்ற இத்திருஷ்டாந்தம்போல அளவுபடாத நமதாத்மசொரூபத்தில் மயக்கத்தைசெய்கின்ற மாயாவிலாசத்தினால்தோற்றும் அந்தத்தில் பெத்தமுத்தியும்இல்லை சொல்லுகின்ற மாயையென்னுஞ்சொல்லும் இல்லை.—எ-று. ௨௩

பழுதையதனிற்றோன்றியிடும் பாம்பையுள்ளபடிநோக்கில்
பழுதையாயேதோன்றியிடும் பாம்புமதுவாய்விடுமஃதின்
பழுதில்சிவத்திற்றோன்றியிடும் பன்மையுலகைநோக்கியிடின்
பழுதில்சிவமேயாய்த்தோன்றும் பன்மையுலகுமதுவாய்ப்போம்.

(இ-ள்.)—பழுதையில் அத்தியாசமாகத் தோற்றுகின்ற சர்ப்பத்தை யுதார்த்தமாய் பார்க்குமிடத்தில் பழுதையாகவே காணப்படும். சர்ப்பமும் அப்பழுதையாகிப்போம். அத்திருஷ்டாந்தம்போல, களங்கமற்ற பிரமத்தில் அத்தியாசமாய் காணப்பட்ட பலவுலகங்களை யதார்த்த திருஷ்டியாய் பார்க்குமிடத்தில் குற்றமின்றிய பிரமஸ்வரூபமேயாகி பிரகாசிக்கும் பலவுலகங்களும் அந்தப் பிரமசொரூபமேயாம்.—எ-று. ௨௪

தோன்றிவிளங்கும்பொருளெல்லாந் தொல்வேதாந்தவிசாரணையின்
ஊன்றிநோக்கியனுதினமு மூகமதனிற்பரிசயித்தால்
தோன்றிவிளங்குமறிவொன்றே சொன்மாத்திரமாய்விடுமுலகம்
ஊன்றிநோக்காதவர்கட்கே யுளதுபோலத்தோன்றியிடும்.

(இ-ள்.)—உண்டாகிப் பிரகாசிக்கின்ற சகல வஸ்துக்களும் பழமையாகிய வேதாந்தவிசாரத்தில் நிலைத்துப்பார்த்து சதாகாலமும் யுத்தியினால் ஆராய்ந்தறிந்தால் உண்டாகிப் பிரகாசிக்கின்ற பிரமமாத்திரமேயாம். பிரபஞ்சமானது வசனமாத்திரமாய்ப்போம். நிலைத்து பாராதவஞ்ஞானிகளுக்கே யதார்த்தம்போல் விளங்கும்.—எ-று. ௨௫

ஏகமாகிநின்மலமா யிருக்குநமக்கிப்பந்தமெனும்
மோகம்வந்ததேதென்று முன்பின்பாராதிப்பந்தம்
போகவழியேதெனநாடிப் பொருந்தும்வேதவிசாரணையால்
யூகமதனிற்சிதைக்கினதி னுள்ளவியல்புபின்றோன்றும்.

(இ-ள்.)—அத்வைதமாகி மலரகிதமாய் இருக்கின்ற எமக்கு இந்த பந்தமென்கிற மயக்கம் உண்டானது எதினாலென்று முதலும் முடிவும் விசாரியாமல் இந்தப் பந்தம் நீங்க மார்க்கமெதுவென்று விசாரித்து பொருந்துகின்ற உபநிஷத் விசாரத்தினாலும் நுண்ணறிவினாலும் அழித்தால் அப்பந்தத்தினுண்டான சுபாவம் பிற்பாடு தோற்றும்.—எ-று. ௨௬

பரவைதானேயோரலையிற் பலவாய்விளங்குமோரலையில்
பரவைநீங்கியொன்றாகிப் பழையபடியேவிளங்குமதின்
பரவுஞ்சொரூபஞ்சங்கற்பப் பகுதியதனிற்பலவாகிப்
பரவுமசங்கற்பத்தொன்றாய்ப் பழையபடியேவிளங்கியிடும்.

(இ-ள்.)—கடலொன்றே ஒரலையினல் நுரைதிவலை குமிழியாதிய நானுவாகத் தோற்றும் ஒரலையினுல் அங்ஙனம் பரவுதலின்றி கடலொன்றேயாகி முன்போலவே தோற்றும். அத்திருஷ்டாந்தம்போல யாவருந் துதிக்கின்ற பிரமசொருபமானது சங்கற்பப் பகுப்பினுல் நானுவடிவங்களாகி சொல்லுகின்ற சங்கற்பநாசத்தினுல் அத்வைதமாய் முன்போலவே பிரகாசிக்கும்.—எ-று. உஎ

கடங்கடமதுகாரணத்தைக் காட்டிடாதுமுன்விளங்கும்
படங்கடாமுமப்படியே பகர்காரணமுநீங்காது
சடங்களாகுமிச்சகமுந் தான்முன்விளங்குங்காரணமாம்
இடங்கொள்சொரூபத்தையுங்காட்டா திருக்குமதைவிட்டகலாதே.

(இ-ள்.)—குடங்கள் அவ்வவற்றின் காரணமாகிய மண்ணை காட்டாமல் முன்னுகத் தோற்றும். வஸ்திரங்களும் அதுபோலவே சொல்லுகின்ற காரணமாகிய நூலையும் விட்டொழியாது. மித்தையாகின்ற இந்தப் பிரபஞ்சமும் தானே முன்னுகத் தோற்றும். (அன்றியும்) காரணமாகிய பரிபூரணமான பிரமஸ்சொரூபத்தையும் காண்பியாமலும் அப்பிரமசொரூபத்தை விட்டொழியாமலும் பிரகாசிக்கும்.—எ-று. உஅ

மரத்தைநோக்கின்மதகரியு மறைந்துவிளங்குமதைநோக்கின்
மரத்தைமறைத்துத்தான்விளங்கும் வாறுபோலச்சகமுழுதும்
பரத்தைநோக்கினதின்மறைந்து பரமாய்விளங்குஞ்சகநோக்கில்
பரத்தைமறைத்துத்தான்விளங்கும் பரமேயனைத்துமாதலினுல்.

(இ-ள்.)—மரவடிவத்தை பார்க்குமிடத்து மதயானையும் மறைந்துநிற்கும். அவ்வியானையை பார்க்குமிடத்து மரத்தை மூடி யானையே தோற்றும். அத்திருஷ்டாந்தம்போல சகல சராசரப் பிரபஞ்சங்களும் பிரமமாகப் பார்க்குமிடத்து அப்பிரமத்திற் கரைந்து பிரமமாகப் பிரகாசிக்கும். உலகமாகப் பார்க்குமிடத்து பிரமசொரூபத்தை மறைத்து அப்பிரபஞ்சமே தோற்றும். ஆகையால் சர்வம் பிரமமயமாம்.—எ-று. உகூ

நாகந்துதிக்கைதனைநோக்கி னுசிகரமுந்தோன்றியிடும்
நாகநயனந்தனைநோக்கி னயனஞ்செவியுந்தோன்றியிடும்
ஏககருவிபார்த்தபடி யிரண்டுவிதமும்விளங்குமதின்
ஏகபரமும்பார்த்தபடி யிலகுமுலகுஞ்சித்தநுமாய்.

(இ-ள்.)—யானையின் தும்பிக்கையை பார்க்குமிடத்து கிராணேந்திரிய விடயமும் பாணீந்திரியவிடயமும் தோற்றப்படும். பாம்பின் கண்ணை பார்க்குமிடத்து சக்ஷிந்திரியவிடயமும் சுரோத்திரேந்திரியவிடயமும் தோற்றப்படும். ஓரிந்திரியக்கருவியில் பார்த்தபிரகாரமே இருவகை விஷயங்களும் பிரகாசிக்கும். அத்திருஷ்டாந்தம்போல அத்வைதப் பிரமமும் இருந்தபடியே சடசித்ததுக்களாய் பிரகாசிக்கும்.—எ-று. ௩௰

ஊனும்போகமெமதென்றே யுன்னல்விசாரமிலாமையினுல்
நீநானவைகளிவைகளென நிலைபோல்விளங்கியிடுமிந்த
நாநாவிதமாஞ்சகமுழுது நாமேயன்றிவேறில்லை
தானுய்நோக்கிற்ருனுகுஞ் சகமாய்நோக்கிற்சகமாகும்.

(இ-ள்.)—ஆத்மவிசாரமின்மையால் தேகபோகங்களை எம்முடையதென்று சிந்திப்பது. நீ நான் அதுக ளிதுகளென்று ஸ்திரம்போல் தோற்றும் (அங்ஙனந் தோற்றுகின்ற) இப்பலவகையாகிய பிரபஞ்சமுழுமையும் நமது சொரூபமன்றி அன்னியமில்லை. ஆத்மாவாய் பார்க்கில் ஆத்மாவாகும். பிரபஞ்சமாய் பார்க்கில் பிரபஞ்சமாகும்.—எ-று. ௩௧

மாயையெனுமிவ்வுரைக்கருத்த மதிக்கின்யாதொன்றிலாததுவே
மாயையெனலிப்படியிருக்க மதிப்பரதனையிருவகையாய்
மாயைமெய்யென்றுரைத்திடுவர் மயக்கப்பட்டுதெதனைமறந்தோர்
மாயைபொய்யென்றுரைத்திடுவர் மயக்கநீங்கித்தனையறிந்தோர்.

(இ-ள்.)—மாயையென்கின்ற இவ்வசனத்திற்கு பயன் ஆராயுமிடத்து ஒன்றுமில்லாததே. மாயையென்பது இங்ஙனமிருக்க அதை இரண்டுவிதமாய் சொல்லுவார்கள். மயக்கமடைந்து தன்னை மறந்தவர்கள் மாயையை உண்மையென்று சொல்லுவார்கள். மோகமில்லாமல் ஆத்மாவை அறிந்த ஞானிகள் மாயையை மித்தையென்று சொல்லுவார்கள்.—எ-று. ௩௨

நாமரூபந்தனைநோக்கி நாடன்மனமும்புறமுகமும்
நாமரூபந்தனைநீக்கி நாடலறிவுமுண்முகமும்
நாமரூபத்தெவ்வளவு நாட்டஞ்சொருபந்தோன்ருது
நாமரூபநாட்டம்விடி னமதுசொருபந்தோன்றியிடும்.

(இ-ள்.)—நாமரூப விஷயங்களை நோக்கிப்பார்ப்பது மனதும் பகிர்முகமும் நாமரூப விஷயங்களை விட்டுப்பார்ப்பது ஞானமும் அந்தர்முகமும் நாமரூபங்களில் எவ்வளவு காலம் திருஷ்டியோ (அவ்வளவு காலமும்) அறிவு தோன்ருது. நாமரூபங்களில் திருஷ்டி நீங்கினுல் நமது ஆத்மசொரூபம் தோற்றிவிளங்கும்.—எ-று. ௩௩

அரையகுமாரன்புலேயருட னணுகிமறந்துமொருவரால்
அரையகுமாரனெனவறியி லஃதெப்போதுமறவாதின்
தரையிலாசானெழுந்தருளித் தனேப்பார்த்ததுநீயெனவுரைக்கில்
புரையிலதுவாமுவவத்தை பொருந்தும்பொழுதுமறவானுல்.

(இ-ள்.)—இராஜகுமாரன் நீசர்களோடு சேர்ந்து மறந்திருந்தும் ஒரு புருடரால் ராஜகுமாரனென்று அறிந்தால் அவ்வசனம் எந்த காலமும் மறவாததுபோல பூமியில் ஆசிரியர் எழுந்தருளிவந்து ஆத்மாவை நோக்கி பிரமமே கூடஸ்தனென்று உபதேசிக்குமிடத்து மாசற்ற பிரமசொருபமாவன். அவஸ்தாத்திரியங்கள் அடையுங்காலத்தினும் மறக்கமாட்டான்.—எ-று. ௩௪

படியிற்பொருளின்மெய்யொன்று படிறென்றிந்தவிருவகையும்
முடிவின்மெய்பொய்யறிந்திடலா மொழியுமிந்தத்தகைமைபோல்
கொடியவுலகைமெய்யெனவே கூறுமதையுமறிந்திடலாம்
முடிவில்சகம்பொய்யேயாகு முத்தியொன்றேமெய்யாகும்.

(இ-ள்.)—உலகத்தில் வஸ்துவில் உண்மையொன்று பொய்யொன்று இவ்விரண்டுவிதமும் கடைசியில் மெய்யும் பொய்யும் தெரியலாம். சொல்லுகின்ற இத்திருஷ்டாந்தம்போல கொடுமையான உலகத்தை சத்தியமென்று சொல்லுகிறதையும் அந்தத்தில் தெரியலாம். (ஆதலால்) உலகம் அசத்தியமேயாம். ஏகரசமான மோட்சமே சத்தியமாகும்.—எ-று. ௩௫

அகிலந்தோன்றும்பொழுதுமறைந் ததிட்டானமதாய்விளங்கியிடும்
அகிலநீங்கிற்றன்விளங்கு மந்தச்சச்சிதானந்தம்
அகிலந்தோன்றும்பொழுதுமறைந் ததுதோன்றுதல்போலதுதோன்றில்
அகிலந்தோன்றுததனின்மறைந் ததனுலகிலமசத்தாமே.

(இ-ள்.)—அவ்வகைப்பட்ட அஸ்திபாதிப்பிரிய வஸ்துவானது சகத்தோற்றரவில் சேவதிருஷ்டியில் மறைந்து அதிஷ்டானமாத்திரமாய் பிரகாசிக்கும். சகத்தோற்றரவு நீங்கினல் அப்பிரமமே பிரகாசிக்கும். சகத்தோற்றரவில் மறைபட்டு அவ்வுலகமே தோற்றுவதுபோல பிரமந்தோன்றில் அப்பிரமத்தின் மறைந்து சகந்தோன்றுது. அவ்வனுபவத்தில் உலகம் அசத்தியமாம்.—எ-று. ௩௬

முத்தியாதோவெனவெண்ணி முயங்கவேண்டாமிஃதறுதி
முத்தியுளதேற்பந்தமுண்டா முத்தியொருகாலேயுமில்லே
முத்திதானுஞ்சகம்வேறில் மோகமதிற்காண்பதைப்போக்கில்
மூத்தியாகுமிந்நிலேயை முயன்றுவருந்திநிலேகொள்வாய்.

(இ-ள்.)—மோட்சம் எஃதோவென்று நினைந்து முயற்சிக்கவேண்டாம். இது சத்தியம் மோட்சமுண்டானல் பெத்தமுளதாகும் மோட்சம் ஒரு காலத்திலுமில்லை மோட்சம் தானன பிரமஸ்வரூபமாம் உலகம் அன்னிய மின்று மோகத்தினுல் பார்ப்பதை நசிக்கில் மோட்சமாம். இவ்வனுபவத்தை முயற்சித்து பிரயாசைப்பட்டு நிலையடைவாய்.—எ-று. ௫எ

இல்லாமாயைதங்கணிலே யாருநிற்கவம்மம்ம
பொல்லாப்பிறப்பிற்பட்டதுமாய் பொக்கமிகவுந்தவிர்த்ததுமாய்
நல்லாரிணக்கஞ்சேர்ந்ததுமாய் ஞானவிசாரமுதித்ததுமாய்
எல்லாமாம்வீடடைந்ததுமா யார்க்குங்காட்டிமறைந்திடுமே.

(இ-ள்)—அவ்வவர்களாத்மநிலைமையில் எவர்களும் இருக்க அதிசயம் அதிசயம் சடமானமாயையானது பொல்லாதஜன்மத்தில் அகப்பட்டதாகவும் பொய்யை அதிகமாய் ஒழித்ததாகவும் சாதுசங்கத்தை சேர்ந்ததாகவும் ஆத்மவிசாரணை உண்டானதாகவும் சர்வமுமாகியமோட்சத்தை அடைந்ததாகவும் எவர்களுக்கும் காண்பித்து மறையும்.—எ-று. ௫அ

எல்லாநீங்கிச்சற்குருவை யெங்குந்தேடியடைந்தருளி
நல்லாருணருஞானநூன வின்றுவிசாரஞ்செய்வதுவும்
பொல்லாமனத்தையொடுக்கிநிட்டை பொருந்திநோக்கலாநோக்கும்
இல்லாமாயைதனைத்துணிவா யில்லையெனவேகாண்குதற்கே.

(இ-ள்) சர்வசங்க பரித்தியாகஞ்செய்து ஞானுசிரியரை எவ்விடத்துந் தேடி சரணமடைந்து பெரியோர்கள் அறிகின்ற ஞானசாத்திரங்களை படித்து விசாரணைசெய்வதும் பொல்லாத மனதை அடக்கி நிஷ்டையடைந்து பாராமற்பார்ப்பதும் மித்தையானமாயையை தெளிவாய் இன்றென்றே பார்ப்பதற்காம்.—எ-று. ௫௯

விளங்குஞ்சகங்களனைத்தினிலும் விளங்குநாமாதிகணீங்கி
விளங்குமதைமாத்திரநோக்கில் விளங்கும்பிரமமக்கணமே
விளங்குநாமாதிகளுமதாய் விளங்கும்வேறாய்விளங்காது
விளங்குமிந்தநிலையெவர்க்கும் விளங்குமவிரோதமதாயே.

(இ-ள்) தோற்றுகின்ற சகலபிரபஞ்சங்களிலும் தோற்றுகின்ற நாமரூபங்களைவிட்டு பிரகாசிக்கின்ற அறிவைமாத்திரம் பார்க்குமிடத்து பிரமஸ்வரூபமானது அந்தட்சணமே பிரகாசிக்கும் தோற்றுகின்ற நாமரூபங்களும்

அப்பிரமமாய் பிரகாசிக்கும் அன்னியமாய் தோன்றாது பிரகாசிக்கின்ற இச்சுக நிலையானது எவர்களுக்கும் விரோதமின்றி பிரகாசிக்கும்.—எ-று. ௪0

நாமரூபம்விளக்கல்பரம் நாடலுயிராமலைமாயை
நாமரூபந்தனைநோக்கி நாடச்செய்தலஞ்ஞானம்
நாமரூபத்திவ்வளவு நாட்டமெனவேசெய்தல்வினை
நாமரூபந்தனைநோக்கி நாடுமிடத்திலிவைநிகழும்.

(இ-ள்) நாமரூபப்பிரபஞ்சங்களை பிரகாசிப்பிப்பது ஈஸ்வரன் அவற்றினைப் பார்ப்பது சீவனும் அதுகள் மாயாமலம் நாமரூபப்பிரபஞ்சங்களை கூர்ந்து பார்க்கச்செய்தல் ஆணவமலம் நாமரூபப்பிரபஞ்சத்தில் இவ்வளவுகாலம் திருஷ்டியென்று செய்வித்தல் கன்மமலம் நாமரூபப்பிரபஞ்சஞ்களை கூர்ந்து பார்க்குமிடத்தில் இவ்வைந்தும்பிரகாசிக்கும்.—எ-று. ௪௧

உருவநாமநோக்கிடத்தி லுளவாமிந்தவைவகையும்
உருவநாமநீக்கிடத்தி லொன்றுமிவைகளிலவாகிச்
சொருபமொன்றேநிகழ்தலினாற் சொன்னவிவைகளைவகையும்
சொருபமன்றிவேறில்லை தோன்றும்விவகாரத்திசையில்.

(இ-ள்) நாமரூபங்களை பார்க்குமிடத்தில் இவ்வைந்துவிதமும் உண்டாயினவாம் நாமரூபங்களை நீக்குமிடத்தில் இவைகளொன்றும் இல்லனவாகி பிரமமொன்றுமே விளங்கும்தன்மையினால் முற்சொல்லிய இந்த ஐந்துவிதமும் பிரமமன்றி அன்னியமில்லை விவகரிக்குமிடத்தில் அவ்வைந்தும் பிரகாசிக்கும்.—எ-று. ௪௨

விவகாரத்திற்பகுப்புகளாய் விரியும்பரமார்த்தம்மதனில்
சிவகாரமதாய்விளங்கியிடுஞ் சிவமேயனைத்துமாதலினால்
பவகாரியத்தையுடையோர்க்குப் பகுப்பேயென்றுந்தோன்றியிடும்
பவகாரியத்தையொழிந்தோர்க்குப் பகுப்பொன்றின்றிச்சிவந்தோன்றும்.

(இ-ள்) விவகாரதிசையில் பிரிவுகளாகி பரவும் பரமார்த்ததிசையில் பிரமாகாரமாய் பிரகாசிக்கும் பிரமமே சகலமும் ஆகையினால் பிறப்பையுடையவர்களுக்கு பிரிவுகளே எப்போதும் பிரகாசிக்கும் பிறப்பைநீங்கின மகான்களுக்கு ஒருபிரிவுமில்லாமல் பிரமம் பிரகாசிக்கும்.—எ-று. ௪௩

பந்தத்திசையிற்பலவென்றும் பரமார்த்தத்திலொன்றென்றும்
இந்தச்சடங்குசொருபத்தி லென்றுமில்லைநோக்கியிடின்
எந்தக்காலுமொருபடித்தா யிலங்குஞ்சொருபமிவைமாயா
தொந்தத்ததனிற்றேன்றியிடுஞ் சொருபத்தாரோபிதமாகும்.

(இ-ள்) அஞ்ஞானதிசையில் நானுவென்றும் ஞானதிசையில் ஏகமென்றுஞ் சொல்லப்பட்ட இக்கர்ப்பனை பிரமத்தில் எப்போதுமில்லை பார்க்குமிடத்து எக்காலத்தும் ஒரேபிரகாரமாய் பிரமஸ்வரூபமானது பிரகாசிக்கும் இதுகள் மாயையின்தொடர்பினுல் பிரகாசிக்கும்பிரமத்தில் அத்தியாசமாகும்.—எ-று. சச

மித்தியவாதிவேதாந்தி விளங்குஞ்சைவசித்தாந்தி
சத்தியவாதியிருவர்களுஞ் சாற்றுந்தங்கட்கடுக்காதை
மித்தியவாதிசகத்தினுக்கு விளம்புஞ்சிருட்டிமுடிவினின்று
சத்தியவாதிசிவமொழிந்து சற்றும்வேறில்லெனவுரைக்கும்.

(இ-ள்) வேதாந்தியானவன் உலகத்தைபொய்யாகவாதிப்பவன் பிரகாசிக்கின்ற சைவசித்தாந்தியோவென்றுல் மெய்யாகவாதிப்பவன் இவ்விருதிறவரும் தங்களுக்குத்தகாதவற்றை சொல்லுவார்கள் வேதாந்தி பிரமத்தினின்று உலகத்திற்கு சிருஷ்டியாதிய கற்பனைகளைச் சொல்லுவன் சைவசித்தாந்தி சிவச்செயலன்றி கிஞ்சித்தும் வேறேயில்லையென்று சொல்லுவன்.—எ-று. சரு

சகமதென்பதில்லையெங்குந் தானேநின்றுவிளங்கியிடும்
சகமதெனவேதோன்றிடுதல் தனதுசங்கற்பம்மதனில்
அகமதனிலேகண்டுணரா தவையிற்சிக்கிப்பந்தமுறும்
அகமதனிலேகண்டகற்றி லப்போபண்டைப்படிநிகழும்.

(இ-ள்) பிரபஞ்சமென்பது இல்லை எவ்விடத்தினும் பிரமமேநின்று பிரகாசிக்கும் பிரபஞ்சமென்று காணப்படுவது தன்னுடைய சங்கர்ப்பஜாலத்தில் அகத்தில் கண்டறியாமல் அதுகளில் அகப்பட்டு பந்தப்படுவன் அகத்தில்பார்த்து நீக்கினுல் அப்போது முன்போல பிரகாசிக்கும்.—எ-று. சசு

பந்தமின்றிவீடின்றிப்பரமே யெங்கும்விளங்கிடவும்
பந்தம்வீடென்றுரைத்திடுதல் பார்க்கின்மாயாமோகமதில்
சிந்தைவிரிவேபந்தமதாஞ் சிந்தையொடுக்கமேவீடாம்
இந்தவகையாம்பந்தம் வீடியம்புமபவாதமதாகும்.

(இ-ள்) பெத்தமின்றி முத்தியின்றி பிரமமே எவ்விடத்திலும் பிரகாசிக்கவும் பெத்தமுத்தியென்று பேசுவது ஆராய்ந்து பார்க்குமிடத்து மாயாமயக்கமாகும் அதனில்மனவிரிவே பெத்தமாம் மனவொடுக்கமே முத்தியாம் பெத்தமுத்தியென்பது இவ்விதமாய்ச் சொல்லுகின்ற விதுவே அபவாத யுக்தியாகும்.—எ-று. சஎ

தோன்றிநிகழுமுலகெல்லாஞ் சொரூபமேமற்றுருநாமம்
தோன்றிநிகழ்தல்மாயையே சொருபம்விடவும்வேறன்று
தோன்றிநிகழுமுருநாமஞ் சொருபம்விடவேறெனவுன்னி
தோன்றிநிகழ்தல்பந்தமதாஞ் சொருபமெனவேயுனல்வீடாம்.

(இ-ள்) உண்டாகிவிளங்குகின்ற சகலப்பிரபஞ்சங்களும் பிரமமே நாமரூபங்கள் உண்டாகிவிளங்குகின்றது மாயாமோகமே (ஆயினும்) பிரமத்தையல்லாமலும் அன்னியமல்ல உண்டாகிவிளங்குகின்ற நாமரூபங்கள் பிரமத்தையன்றி அன்னியமென்றுநினைத்து உண்டாகிவிளங்குகிறது பெத்தமாகும்பிரமமென்றுநினைப்பது முத்தியாம்.—எ-று. சஅ

உருவநாமமவைக்கிருப்பு முதிப்புஞ்சொருபத்தினையன்றி
உருவநாம்மவைதமக்கே யொருகாலையினுமிலதாகும்
உருவநாமமவைநோக்க லொருவிநமையேநோக்கியிடின்
உருவநாமநிகழ்ந்திடா தொருநம்வடிவாயேநிகழும்.

(இ-ள்) நாமரூங்களுக்கு இருக்கையும் தோற்றமும் பிரமத்தையல்லாமல் நாமரூபங்களுக்கே ஒருகாலத்திலும் இல்லையாகும் நாமரூபங்களை பார்க்குதல் நீங்கிநமதாத்மசொரூபத்தையே பார்த்தால் நாமரூபங்கள் விளங்காமல் ஒப்பற்றநமது சொரூபமாகவே விளங்கும்.—எ-று. சகூ

பந்தமென்றும்வீடென்றும் பயிலுநினைவேபந்தமதாம்
பந்தமெங்காம்வீடெங்காம் பரத்தைவிடவேறிலாமையினுல்
தந்தஞ்சங்கற்பந்தனிலே தாமேமோகித்திடுமுயிர்கள்
தந்தமசங்கற்பந்தனிலே தாமேநீங்கியிடுமோகம்.

(இ-ள்) பெத்தமென்றும் முத்தியென்றும் பழகுகின்றஎண்ணமே பெத்தமாம் பிரமத்தையொழிய அன்னியமின்மையால் பெத்தம் எவ்விடத்தாகும் முத்தி எவ்விடத்தாகும் தங்கள்தங்களுடைய சங்கற்பத்தில் தமக்குத்தாமே சீவர்கள் மயங்குவார்கள் தங்கள்தங்களுடைய நிருவிகற்பத்தில் தமக்குத் தாமே அந்தபிராந்தி ஒழிந்துபோம்.—எ-று. ௫௦

உருவநாமந்தனைநோக்கி லொருதன்னிலையைநீங்கினதாம்
உருவநாமந்தனைநீக்கி லொருதன்னிலையேநின்றதுவாம்
உருவநாமமவையிரண்டு மொருதன்வடிவேயெனக்காணில்
உருவநாமந்தானேயா யொளிருமதுவேமுத்தியுமாம்.

(இ-ள்) நாமரூபங்களைப்பார்க்குமிடத்து ஒப்பற்றசொருபநிலைமையை விட்டதாகும் நாமரூபங்களைவிட்டால் ஒப்பற்ற சொருபநிலைமையில் இருந்ததாகும் நாமரூபங்களிரண்டும் ஒப்பற்றதனது சொருபமேயென்றுபார்க்கில் நாமரூபங்கள் தனதுசொருபமேயாகி பிரகாசிக்கும் அஃதே மோக்ஷமுமாகும்.—எ-று. ௫௧

கொள்ளுநெறியேதேதுபந்தங் கூடும்வீடேதெனவேண்டாம்
உள்ளும்புறம்புமெனுமிவை யிலுதவுமெஃதுதனக்கதனின்
றெள்ளுஞ்சங்கற்பங்களெலாமிரிய நோக்கிநின்றதன்னை
உள்ளும்புறம்புமின்றியெங்கு மொளியாய்க்காணலாகியிடும்.

(இ-ள்) அடையுமார்க்கம்யாது பெத்தம்யாதுமுத்தியாது என்றுசொல்லவேண்டாம் அகமும்புறமும்என்கின்ற விவையில்தனக் கனுபவமாகின்றது எதுவோ அதனிலிருந்து நினைக்கின்ற சகலசங்கற்பங்களும் கெடப்பார்த்தால்சேடித்ததனது சொரூபத்தை அகமும்புறமுமில்லாமல் எவ்விடத்திலும் சுயம்பிரகாசமாய் கண்டனுபவிப்பதாகும்.—எ-று. ௫௨

ஒளியேயெங்கும்விளங்கிடு மவ்வொளியில்விளங்குமுலகெல்லாம்
ஒளியேயன்றிவேருமோ வொளியையறியாருலகென்பர்
ஒளியேயன்றியுலகு தனக்கொருகாரணமுமிலையதனுல்
ஒளியேயனைத்துந்திரைநுரை களுவரியலதுவேருமோ.

(இ-ள்) சிற்பிரகாசமே எவ்விடத்தும் பிரகாசிக்கும் அந்தச்சிற்பிரகாசத்தில் பிரகாசிக்கின்ற சர்வப்பிரபஞ்சங்களும் சிற்பிரகாசமேயன்றி அன்னியமாகுமோ சிற்பிரகாசத்தை தெரியாதவஞ்ஞானிகள் உலகமென்றுசொல்லுவார்கள் சிற்பிரகாசத்தை யொழிந்து உலகத்திற்கு ஒரேதுவும்இல்லை அவ்வனுபவத்தினுல் சர்வமும் சிற்பிரகாசமே அலைநுரைகள்சமுத்திரமன்றி அன்னியமாகுமோ.—எ-று. ௫௩

மாயைவேறென்றெனவுன்னி மதிக்கவேண்டாம்பேதமதி
மாயையாகுமற்றஃதை வருந்திமுயன்றுபேர்த்திடுக
மாயைநீங்குமிந்த மதிவந்தவழியேதெனவேண்டாம்
மாயைநெறியிலம்மதியை வதைக்கிலதுவந்ததுதோன்றும்.

(இ-ள்)—மாயையென்பதை வேறுபொருளென்று நினைந்து அளவிடவேண்டுவதில்லை பேதபுத்தியே மாயையென்பதாம் அப்பேதபுத்தியை வருத்தப்பட்டுமுயற்சித்து நீக்கினால் மாயையென்பதுகெடும் இப்பேதபுத்திவந்தவகை யாதென்று விசாரிக்கவேண்டுவதில்லை சற்கருமமாதிகளால் அப்புத்தியை நசிக்கில் அப்புத்தியானது வந்தவழிதெரியும்.—எ-று. ருச

விளங்கியிடுமிவ்வுலகெல்லா மித்தைவடிவேயென்பதுவும்
விளங்குமெங்குந்தற்சொருப விமலவடிவேயென்பதுவும்
விளங்கிலருத்தமொன்றேயாம் வேறாய்க்காணுமஃதகற்றி
விளங்குமொளியாயேகாண்கில் விளங்குமருத்தமொன்றாயே.

(இ-ள்)—தோற்றப்படுகின்ற இப்பிரபஞ்சமெல்லாம் மித்தையாரூபமே என்றுசொல்வதும் எவ்விடத்தும் தத்பதசொரூபமாகிய மலரகிதமான பிரம சொரூபமே பிரகாசிக்குமென்று சொல்லுவதும் அனுபவமாயின் ஒரேயர்த்தமாம் அன்னியமாய்ப்பார்க்கின்ற அந்தத்துவிததிருஷ்டியை ஒழித்துப்பிரகாசிக்கின்றசிற்பிரகாசமாகவேபார்க்கில் ஒரேயர்த்தமாய்ப் பிரகாசிக்கும்.—எ-று.

தனதுசங்கற்பந்தனிலே சகங்களாகிவிளங்கியிடும்
தனதசங்கற்பந்தனிலே சகம்போயொடுங்குமதனாலே
தனதுவடிவேசகங்களெல்லாந் தன்னைவிடவேறில்லைதங்கம்
தனதுவடிவைவிடப்பணிக டாம்வேறாகிவிளங்கிடுமோ.

(இ-ள்)—தனதுசங்கற்பத்தினாற் பிரபஞ்சங்களாய்க் காணப்படும் தனது அசங்கற்பநாசத்தினாற் பிரபஞ்சம் போயடங்கும் அவ்வனுபவத்தினால் தற்சொருபமே சகலபிரபஞ்சங்களும் தற்சொருபத்தையன்றி அன்னியமன்று தங்கத்தின்சொருபத்தையல்லாமல் ஆபரணங்களும் அன்னியமாகிப் பிரகாசிக்குமோ.—எ-று. ருசு

நிலைமைநீங்கிற்சகமுதித்து நிசமுமாகுமற்றவையின்
நிலைமைஞானவிசாரணையினிசம்போ யொடுங்குந்தோற்றரவும்
நிலைமையாகுந்தனைநோக்கி னீங்கிமறையுமிச்சகத்தின்
நிலைமையொருவேதுவிலுதிக்கு நீங்குமிருமையேதுவினில்.

(இ-ள்)—சொருபஸ்திதியை யொழிந்தால் உலகந்தோன்றி உண்மையுமாம் அப்பிரபஞ்சத்தினிலைமை ஆத்மவிசாரத்தினால் நிசமென்பது போயடங்கும் காட்சியும் ஸ்திரமாகிய தற்சொருபத்தைப்பார்க்கில் மறைந்துபோ

கும் இப்பிரபஞ்சநிலைமை ஒருகாரணத்தினால்தோற்றும் இரண்டுகாரணத்தினால்ஒழியும்-எ-று. ஒருவேதுவென்பது சொரூபஸ்திதியைமறப்பது இருமையேதுவென்பது விசாரஞானமும் அனுபவஞானமுமெனக்கொள்க.—எ-று. ௱௨

எல்லாநாமெப்படியாவோமென்ன வேண்டாமிலக்கணம்பார்த்
தெல்லாநோக்கியிடமிடத்திலிருப்புந் தோற்றரவுமின்பும்
எல்லாவிடத்துமுண்டாகுமியல் புமவையேபிறித்திட்டால்
எல்லாமெங்கேதோன்றிடு மிங்கிதனாலெல்லாநாமாகும்.

(இ-ள்)—சர்வமும் யாம் எவ்விதத்தில் ஆகிவிளங்குவோமென்று சந்தேகிக்க வேண்டுவதில்லை இலட்சணத்தைக்கண்டு சர்வத்தையும் ஏகாகாரமாகப் பார்க்குமிடத்தில் சத்தும்சித்தும் ஆனந்தமும் சகலவிடங்களிலும் உள்ளதாகும் சுபாவமும் அதுகளேஅங்ஙனம்பகுத்து நோக்கில் சர்வமும்எவ்விடத்தில் தோற்றும் இவ்விடத்து இவ்வனுபவத்தினால் சர்வமும்நாமேயாம்.—எ-று. ௱௪

வெள்ளிவிகற்பமதிற்கிளிஞ்சில் விளங்கும்விகற்பந்தனைநீக்கித்
தள்ளின்வெள்ளியென்பதுபோய்த் தானேவிளங்குமக்கிளிஞ்சில்
வெள்ளியென்றபொழுதுமல விகற்பமென்றபொழுதுமது
வெள்ளியாகிநீங்கினதின் விமலத்ததுபோன்மாயையுமே.

(இ-ள்)—கிளிஞ்சிலானது வெள்ளியென்னும் விகற்பத்தினால் பிர்காசிக்கும் அவ்விகற்பத்தைநீக்கிப்பார்க்கில் வெள்ளிவிகற்பம்போய் அந்தக்கிளிஞ்சில் தன்மயமாகவே பிரகாசிக்கும் வெள்ளியென்றுநினைத்தபோதும் அல்ல விகற்பமென்றுநினைத்தபோதும் வெண்மையாகி ரசிதபிராந்திநீங்கினதுபோல பிரமத்தில் மாயையென்பதும் அதுபோலும்.—எ-று- ௱௫

ஒன்றேயென்னின்முத்தியில்லை யொருவன்வேறேயுண்டென்னில்
ஒன்றேயாகமாட்டான் மற்றொன்றுமென்னிலொன்றுகெடும்
ஒன்றேயென்றவாதிகட்குமோது மிரண்டேயென்றவர்க்கும்
ஒன்றேயிரண்டுமாமொன்றே யுண்மைகற்பிதமிரண்டே.

(இ-ள்)—ஏகமேயென்றால் மோட்சமில்லை ஓர்புருஷன்பின்னமாக உண்டென்றால் ஒன்றானஐக்கியம்பெறான் ஒனறாகுமென்றால ஒன்றுநசிக்கும் மித்தியாவாதிகளாகிய வேதாந்திகளுக்கும் சொல்லுகின்றசத்தியவாதிகளாகிய சைவசித்தாந்திகளுக்கும் ஓர்வஸ்துவே இரண்டுநிச்சயமுமாம் (ஆதலால்) அத்வைதமேசத்தியம் துவிதமே அசத்தியம்.—எ-று. ௲௰

விகற்பமிலதுமுதற்றோன்றி விளங்கும்விமலமதினின்றும்
விகற்பமதனிற்சகந்தோன்றும் விண்ணிற்பீலிதோன்றுவபோல்
விகற்பமதிற்றோன்றுவதொழிந்து வேறில்லெனவேவிடுத்ததனை
விகற்பமின்றியேநோக்கின் விளங்கும்விமலந்தானுயே.

(இ-ள்)—பிரமம் நிருவிகற்பமாய் பிரதமத்தில்பிரகாசிக்கும் விகற்பத்தினுல் அதன்கண்நின்றும் வானத்தில் மயிற்குஞ்சந் தோற்றுவதுபோல பிரபஞ்சந தோற்றும் (ஆதலால்) விகற்பத்தில் தோற்றுவதைநசித்து அன்னியமன்றென்றுவிட்டு அதைஓர்விகற்பமுமில்லாமல் பார்க்குமிடத்து பிரமம் தன்மயமாகவே பிரகாசிக்கும்.—எ-று. சுக

இந்தவிடயமவையில்வருமின்பும் பேரின்பத்திருந்தே
வந்தலேசமிட்டமதுவந்து கிடைத்தவக்கணமே
அந்தமுகமாய்மதிதிரும்பி யறிவானந்தங்கணம்புசிக்கும்
அந்தமுகமேயெக்காலுமாகி னனைத்துமடைந்ததுமாம்.

(இ-ள்.)—இந்த நாமரூபப் பிரபஞ்ச விஷயங்களில் வருகின்ற ஆனந்தமும் பேரானந்தத்தினின்று உண்டாகிய அமிசமாம். (அஃதெங்ஙனமெனில்) (ஒரு வஸ்துவின்மேல்) இஷ்டம் பிறந்து கிடைக்கப்பெற்ற அந்தக்ஷணமே அவ்விஷயமுகமாய்ச் சுகவிருத்தியானது திரும்பி தனது ஞான சுகத்தை க்ஷணநேரம் அனுபவிக்கும். அவ்விஷயமுகமேயாய் எப்போதும் விளங்குமிடத்து சர்வானந்த திருப்தியும் அனுபவித்ததுமாம்.—எ-று. சுஉ

விருத்தியொன்றுமில்லாமல் விளங்குநிலையேநாமதனில்
விருத்திதோன்றின்முன்பி னின்றிவிளங்குஞ்செகசிவபரங்கள்
விருத்திநீங்கின்முப்பொருளும் விளங்கிடாமற்றதனுலே
விருத்திதானேபந்தமதாம் விருத்தியொழிவேவீடாகும்.

(இ-ள்.)—ஒரு விருத்தியுமின்றிப் பிரகாசிக்குநிலைமையே நமது சொருபம். அச்சொருபநிலையில் ஸ்புரணமுண்டாகில் முன்னும்பின்னுமில்லாமல் ஜீவேஸ்வரசகத்துக்கள் பிரகாசிக்கும் ஸ்புரண நீங்கினுல் மூன்று பொருள்களும் தோன்ருதனவாம். அவ்வனுபவத்தினுல் ஸ்புரணமே பெத்தமாம். ஸ்புரணநீக்கமே முத்தியாகும்.—எ-று. சுந

நிருவிகற்பாமதிடத்தி னின்றுவிகற்பமுதித்தளவில்
ஒருமுப்பொருளுமுதித்துவிடு மொருங்கேமூலவிகற்பமதை
ஒருவினமதுநிலைதோன்று மொருமுப்பொருளுமதுவாகும்
குருவினருளினிற்நிலையைக் கூடவேண்டுநெறிநின்றே.

(இ-ள்.)—நிர்விகற்பமாகிய நமது சொரூபத்தில் இருந்து விகற்பமானது உண்டானமாத்திரத்தில் ஒப்பற்ற சீவேஸ்வரசகத்துக்களும் உண்டாகிவிடும். அடியோடு காரணமான விகற்பநினைவை ஒழித்தால் நமது சுபாவநிலைமை பிரகாசிக்கும். ஒப்பற்ற அம்மூன்று பொருள்களும் அஃதாகவே விளங்கும். ஞானசிரியரது கிருபையினால் ஒழுங்கினின்று இந்தச் சொரூபநிலைமையை அடையவேண்டும்.—எ-று. சுச

ஏகபரத்திற்றோன்றுலகி லெங்கும்விடயமாதல்பரம்
ஏகவிடயமாதலுயி ரிந்தவுயிர்க்கேமுத்தியினி
ஏகவிடயமுதற்றள்ளி யெங்குமாகும்விடயமதும்
ஏகத்தள்ளிமற்றுலகு மிறக்கிற்பண்டைப்படிநிகழும்.

(இ-ள்.)—அத்வைதமாகிய பிரமத்தில் தோற்றுகின்ற பிரபஞ்சத்தில் சமஷ்டிவிடயமாகின்றது ஈஸ்வரன்; வியஷ்டிவிடயமாகின்றது சீவன்; இச்சீவனுக்கே மோட்சம். இதன்மேல் வியஷ்டிவிஷயமாகிய சீவனை முன்பநீக்கிச் சமஷ்டிவிஷயமாகிய ஈசுவரனையும் போகவொழித்துச் சகத்தும்நசித்தால் முன்போல பிரகாசிக்கும்.—எ-று. சரு

எங்கும்விடயமாம்பரத்துக் கிருளெக்காலுமிலையாகும்
தங்குமுயிர்க்கேமறதியுண்டாந் தன்னாற்றளவேகூடிடா
எங்கும்விடயமாம்பரமே யேகவிடயவுயிர்போலத்
தங்கிக்குருவாயெழுந்தருளித் தள்ளுமுயிர்கண்மறதியெலாம்.

(இ-ள்.)—சமஷ்டிவிஷயமாகிய ஈஸ்வரனுக்கு அஞ்ஞானமறைப்பு எந்தக்காலத்திலும் இல்லையாகும். பொருந்திய சீவனுக்கே மறைப்புண்டாகும். தனது வலியினால் சோாதனவாம். சமஷ்டிவிஷயமாகின்ற ஈஸ்வரனே வியஷ்டிவிஷயமாகிய சீவனைப்போல ஓர் வடிவுகொண்டு குருமுகூர்த்தமாய் எழுந்தருளிவந்து சீவர்களுடைய அஞ்ஞான மறைப்பெல்லாம் ஒழிப்பன்.—எ-று. சசா

மாயையதனில்மும்முதலும் வகுப்பாய்விளங்கியிடுமெந்த
மாயைநீங்கிலொருமுதலாய் வகுப்பொன்றின்றிவிளங்கியிடும்
ஆயபிரமமென்றுளதோ வன்றேயில்லாமாயையுமுண்
டாயபிரமமுள்ளளவு மந்தமாயைக்கழிவில்லை.

(இ-ள்.)—மாயா வல்லபத்தினால் சீவேஸ்வரசகத்துக்கள் மூன்றும் பிரிவாய்ப் பிரகாசிக்கும். அம்மாயையானது விசார ஞானத்தினால் நசிக்கில்

பிரமமாத்திரமாய் ஒரு பிரிவுமில்லாமல் பிரகாசிக்கும் ஆகிய பிரமமெப்போதுண்டாயிருக்கின்றதோ அப்போதே காலத்திரயத்திலுமில்லாத மகா மாயையும் உளது ஆகிய பிரமமென்பதுள்ளபரியந்தமும் அம்மாயைக்கு நாசமில்லை.—எ-று. சுஎ

இந்தமாயைக்கழிவிலதே லிந்தவுயிருக்கொருக்காலும்
அந்தமுத்தியிலையென்னி லறையுமுயிர்கடமைமறந்த
பந்தநீங்கினக்கணமே பரமாய்விளங்குமதையன்றி
இந்தவில்லாமாயைக்கழிவி லதினிலைவீடெனல்கூடா.

(இ-ள்.)—இம்மாயைக்கு நாசமில்லையாகில் இச்சீவனுக்கு ஒருபோதும் அழகிய மோட்சம் இல்லையென்றால் சொல்லுகின்ற சீவர்கள் தங்கள் சொரூபத்தை மறந்த மயக்கம் நசிக்கின் அந்தக்ஷணமே பிரமமாய்ப் பிரகாசிப்பார்கள். அதையொழிந்து இம்மாயைக்கு நாசமின்மையால் முத்தியின்றென்பது கூடாவசனமாம்.—எ-று. சுஅ

தன்னைமறைத்தபந்தமதைத் தள்ளிநீங்கிற்றுன்விளங்கும்
தன்னைமறந்ததேபந்தந் தன்னையறிந்ததேமுத்தி
தன்னைவிடவோர்பொருளில்லை தானேபிரமமாயையும்பின்
தன்னைவிடவேருய்விளங்கா தானேயாகிவிளங்கியிடும்.

(இ-ள்)—தற்சொருபத்தை மறைத்தபந்தத்தை ஒழித்துப் பிரத்யேகப்படில் தனது சொருபம் பிரகாசிக்கும் தற்சொருபத்தை மறந்துவிட்டதே பெத்தமாம் தற்சொருபத்தைத் தெரிந்ததே மோட்சமாம் தற்சொருபத்தையன்றி ஓர்வஸ்து வில்லை தானே பிரமசொருபம் மாயையென்பதும் தன்னையல்லாமல் அன்னியமாய் விளங்காமல் தற்சொருபமேயாகிப் பிரகாசிக்கும்.—எ-று. சுகூ

தன்னையறியாவியற்கையினிற் சத்தேபோலவிளங்கியிடும்
தன்னையறிந்தவுடனசத்தாய்த் தானேவிளங்குமிவ்வுலகம்
தன்னையறியுமளவுமிவை தன்னைவிடவேறிலையெனவே
தன்னைநோக்கியிடினவையுந் தானுய்விளங்குமுடிவதனில்.

(இ-ள்)—தற்சொருபத்தை அறியாதசுபாவத்தில் உள்ளதுபோல பிரகாசிக்கும் தற்சொருபத்தை அறிந்தமாத்திரத்தில் இல்லதாகத் தனக்குத்தானே இச்சீவேஸ்வரசகத்துக்குள் பிரகாசிக்கும்தற்சொருபத்தைத்தெரியுமட்டும் இச்சீவேஸ்வரசகத்துக்குள் தற்சொருபத்தையன்றி அன்னியமன்றென்று தற்சொருபத்தையே பாவித்தவரில் அச்சீவேசுரசகத்துக்களும் தீர்ந்தநிலையில் தன்மயமாய்ப் பிரகாசிக்கும்.—எ-று. எ0

இல்லாமாயைதானிருந்தென் னிறந்தென்னவைபந்தமதாகா
இல்லாமாயைதனைமெய்யா யெண்ணுமதியேபந்தமதாம்
இல்லாமாயைதனைப்பொய்யா யெண்ணுமதியேமுத்தியதாம்
இல்லாமாயையில்லையென்றே யியல்பாய்த்தோன்றுந்தன்னிலையில்

(இ-ள்)—மித்தையானமாயையானது இருந்தாலென்ன நசித்தாலென்ன அம்மாயாதோற்றங்கள் பெத்தமாகாது மித்தையானமாயையைச்சத்தியமாய் நினைக்கின்றசித்தவிருத்தியே பெத்தமாகும் மித்தையானமாயையை அசத்தியமாய் நினைக்கின்ற சித்தவிருத்தியே மோட்சமாம் மித்தையானமாயையானது மித்தையென்றே தற்சொருபானுபூதி நிலைமையில் இயற்கையாய்த்தோற்றும்.—எ-று. எக

நினைவேமூலமற்றதனி னின்றுவிரியுமும்முதலும்
நினைவைநீங்கிலவைமூன்று நினைவிலொடுங்குமதனுலே
நினைவேபந்த நினைவொழிவி னிலைமையானமுத்தியுமாம்
நினைவை நீங்கியனுதினமு நின்றநிலையேநின்றிடுக

(இ-ள்)—சங்கற்பமே காரணம் அச்சங்கற்பத்திநின்று முப்பொருள்களும் விகற்பிக்கும் சங்கற்பத்தைநீங்கினுல் அம்முப்பொருள்களும் சங்கற்பத்தில் அடங்கும் அவ்வனுபவத்தால் சங்கற்பமே பெத்தம் சங்கற்பநாசத்தில் ஸ்திரமான மோட்சமுமாம் சங்கற்பத்தைநீங்கி சதாகாலமும் இருந்தபடியே இருக்கக்கடவது.—எ-று எஉ

நினைவுநீங்கிலுருநாம நீங்குமவையைத்தள்ளிடினும்
நினைவுநீங்குமற்றவையி னினக்கேதிச்சையதினின்று
நினைவுநீங்கிநின்றிடமே நிலைமையானமுத்தியென்றும்
நினைவுகொண்டந்நிலையை விட்டுநீங்காதென்றுநின்றிடுக

(இ-ள்)—சங்கற்பநசித்தால் நாமரூபங்கள் நசிக்கும் அவ்வுருநாமங்களை நசித்தாலும் சங்கற்பநசிக்கும் அவ்விருவகையில் உனக்கு எதுவிருப்பமோ அவ்வகையிலப்பியாசித்துச் சங்கற்பநாசஞ்செய்து இருந்தநிலையே ஸ்திரமான மோட்சமென்றும் எண்ணங்கொண்டு அவ்வனுபூதிநிலைமையை விட்டொழியாமல் எப்போதும் இருக்கக்கடவது.—எ-று. எரு

நினைவைநீக்கிநோக்கியிடி னிமலசொருபந்தோன்றியிடும்
நினைவைமேவிநோக்கியிடி னிலையிலுலகந்தோன்றியிடும்
நினைவிலுலகமறிந்ததுவு நீங்கிச்சொருபமறிந்ததுவும்
நினைவினுக்கிற்றுனில்லை நிகழுமாயாமோகமதில்

(இ-ள்)—சங்கற்பத்தைநசித்துப்பார்க்கில்நிருமலமாகியபிரமம்தோற்றும் சங்கற்பத்தைப் பொருந்திப்பார்க்கில் ஸ்திரமின்றிய ஜீவேஸ்வரசகத்துக்கள் தோற்றும் சங்கற்பத்தினால் உலகத்தைத்தெரிந்ததும் சங்கற்பநீங்கிப்பிரமஸ்வரூபத்தைத் தெரிந்ததும் கருத்திற்பார்க்கில் அஃதில்லையாம் மாயாமயக்கத்தி எச
னால் தோற்றும்.—எ-று.

தனதுநிலையிற்றானிற்கச் சாற்றுமாயாமோகமதில்
தனதுவடிவைமறந்துயிர்போற் றங்கிநீங்கிற்றானிகழும்
தனதுவடிவுதோன்றளவுஞ் சத்தேபோலவிளங்கியிடும்
தனதுவடிவுதோன்றளவிற் றானேயசத்தாய்விளங்கியிடும்.

(இ-ள்)—தற்சொருபநிலைமையில் தானிருக்க சொல்லுகின்ற மாயாமயக்கத்தினால் தற்சொருபத்தை மறந்துவிட்டுச்சீவனைப்போல பொருந்தி சொருபநீங்கினால் உலகந்தோற்றும் தற்சொருபம் தோற்றுமட்டும் உள்ளதுபோல காணப்படும் தற்சொருபம் தோற்றியமாத்திரத்தில் தானாகவே இல்லாததாய்க் எரு
காணப்படும்.—எ-று.

கானனீருங்கயிற்றரவுங் கட்டையதனிற்கள்வனுமே
ஆனவவைதம்மதிட்டான மாகுமவைகடோன்றளவும்
ஆனவவைமெய்போற்றோன்று மதுபோற்சகமுமதிட்டானம்
ஆனசொருபந்தோன்றளவு மசத்தல்லாதுபோல்விளங்கும்.

(இ-ள்)—கானற்சலமும் ரச்சுசர்ப்பமும் ஸ்தாணுவில் சோரனும் ஆகியவவைகள் தமது அதிஷ்டானமாகிய பொருள்கள் தோற்றுமட்டும் ஆகியவவைகள் யதார்த்தம்போல் விளங்கும் அத்தன்மைபோல பிரபஞ்சமும் அதிஷ்டானமாகிய பிரமம் பிரகாசிக்குமட்டும் யதார்த்தம்போல பிரகாசிக்கும்.—எ-று.

அதிட்டானமதுதோன்றளவு மதுமெய்போல்விளங்கியிடும்
அதிட்டானமதுதோன்றியபின் னசத்தேயாகிவிளங்கியிடும்
அதிட்டானமதுதோன்றளவு மசத்தென்றெணியேநோக்ககற்றி
அதிட்டானமதாந்தனைநோக்கி லசத்தேயாகிவிளங்கியிடும்.

(இ-ள்)—அதிஷ்டானப்பொருள் தோற்றுமட்டும் அவ்வாரோபப்பொருள் யதார்த்தம்போல பிரகாசிக்கும் அதிஷ்டானபொருள் தோற்றினபின்பு மித்தையாகிப் பிரகாசிக்கும் அதிஷ்டானப்பொருள் தோற்றுமட்டும் மித்தையென்றுபாவித்தே அத்திருஷ்டியைக் கெடுத்து அதிஷ்டானமாகிய தற்சொ எஎ
ரூபத்தைப்பார்க்கில் மித்தையாகிப்பிரகாசிக்கும்.—எ-று.

தன்னைச்சீவனெனத்திரிவாய்த் தானின்றுணர்தலஞ்ஞானம்
தன்னைப்பிரமமெனத்துணிவாய்த் தானின்றுணர்தலேஞானம்
முன்னைத்தொடர்ச்சிவிடயமது மூலவரவும்வாதனையும்
பின்னையொருங்கேயொழிந்துவிடும் பேணல்விடுதலவைவேண்டா.

(இ-ள்.)—தற்சொருபத்தை சிதாபாசனென்று மாறாகதானறிவது அஞ்ஞானமாகும் தற்சொருபத்தை பிரமமென்று திடமாய்தானறிவதே ஞானமாகும் முற்பவத்தொடர்பாகிய விஷயமும் பிரகிருதிவரவும் வாசனையும் பின்பு அடியோடு ஒழிந்துபோம் கொள்ளல் நீக்கல் அவ்விரண்டும் வேண்டுவதில்லை.—எ-று. எஅ

நிமலநெஞ்சையுடையோர்க்கு நிலத்திலாசானெழுந்தருளி
விமலதத்தொமசியெனவே விளம்பிலவனுக்கக்கணமே
மும்மலநீங்கிச்சிவம்விளங்கு மோகநெஞ்சையுடையோர்க்கு
மும்மலச்சார்வாம்வாதனையே மூடிமிகவுநிறைந்திடுமே.

(இ-ள்.)—சுத்தமனசை யுடையவர்களுக்கு பூமியில் ஆசிரியர் எழுந்தருளிவந்து பரிசுத்தமாகிய அது நீயானாயென்று உபதேசிக்கில் அந்தக்ஷணமே மலத்திரியநீங்கி பிரமம்பிரகாசிக்கும் அசுத்தமனசை யுடையவர்களுக்கு மும்மலச்சார்பாகிய வாசனைமூடி மிகவுமதிகரிக்கும்.—எ-று. எகூ

எங்கேநிறுத்தினங்கிருக்கு மியல்பையுடையநெஞ்சுடையோர்க்
கிங்கோர்மயக்கங்களுமில்லை யிச்சையிறந்தநிலையாகின்
அங்கேயாசானெழுந்தருளி யதுநீயெனவேயுரைத்தவுடன்
அங்கேசொருபநாமெனவே யறுதியாகத்தோன்றியிடும்.

(இ-ள்.)—எந்தப்பாவனையில் நிறுத்தினாலும் அப்பாவனையிற்றானே நிலைத்திருக்கும் சுபாவத்தையுடைய சுத்தமனதையுடைய முமூட்சுகளுக்கு இவ்விடத்தில் ஒருபிராந்திகளும் இன்றாகும் நிராசையுடைய நிலைமையைபெற்றால் அவ்விடத்தில் ஆசிரியர் எழுந்தருளிவந்து தத்தொமென்று உபதேசித்தவளவில் அவ்விடத்தில் பிரமமேகூடஸ்தனென்று நிச்சயமாகபிரகாசிக்கும்.—எ-று

ஒருவவேண்டுமனைத்துமென வுன்னவேண்டாம்வினைநீங்கில்
ஒருவுமனைத்தும்வினையுளதே லொன்றிமேவுமற்றவையை
ஒருவல்பற்றல்வையைவிடுத் துள்ளபடியேமுடியுமெனச்
சொருபநாமேயெனத்திடமாய்த் தோற்றுமதற்கேமுயன்றிடுக.

D

(இ-ள்.)—எல்லாம் நீக்கவேண்டுமென்று நினைக்கவேண்டுவதில்லை பிராரத்த நீங்கினல் யாவும் நீங்கும் பிராரத்தமுண்டாயிருக்கில் பொருந்திநிற்கும் அகப்பற்று புறப்பற்று களைநீக்குதல் கொள்ளுதல் ஆகிய அவ்வற்றினை விட்டு உண்டானபிரகாரமே முடியுமென்று பிரமநாமேயென்று உறுதியாய் பிரகாசிக்கு மனுபவத்திற்கே முயலுக.—எ-று. அக

சொருபநாமேயெனத்திடமாய்த் துணிந்தபேர்களில்லறத்தை
மருவிநீங்காதிருந்திடினு மற்றோர்குறையுமவர்க்கில்லை
சொருபநாமேயெனத்திடமாய்த் துணியாதவர்களில்லறத்தை
ஒருவிநீங்கினதுகொண்டே யுளதோமுத்திபவமறுமோ.

(இ-ள்.)—பிரமநாமேயென்று உறுதியாய் தெளிந்தவர்கள் இல்வாழ்க்கையை பொருந்தி ஒழியாதிருந்தாலும் ஓர்குறைபாடும் அவர்களுக்கு இல்லையாகும் பிரமநாமேயென்று உறுதியாய் தெளியாதவர்கள் இல்வாழ்க்கையை விட்டுத்துறக்கில் அதனல் மோட்சமுளதோ பிறவிநீங்குமோ.—எ-று. அஉ

மருவியில்லினிருந்தவர்க்கு மருவுஞ்சோகமோகமென்றும்
ஒருவித்துறவையடைந்தவர்கட் கொருவுமென்றுங்கூடாது
சொருபநாமென்றறியார்க்குச் சோகமோகமற்றுவிடா
சொருபநாமென்றறிந்தவர்க்கே சோகமோகமற்றுவிடும்.

(இ-ள்.)—கூடிஇல்லறத்தி லிருந்தவர்களுக்கு சோகமோகங்கள் பொருந்துமென்றும் சகலமுநீங்கி துறவறத்தைப் பெற்றவர்களுக்கு நீங்குமென்றும் நினைக்கக்கூடாது பிரமநாமென்று உணராதவஞ்ஞானிகளுக்கு சோகமோகங்கள் ஒழியாதனவாம் பிரமநாமேயென்று உணர்ந்தஞானிகளுக்கே சோகமோகங்கள் ஒழிந்துபோம்.—எ-று. அங

மித்தையதனைப்பற்றுதலும் விடவும்வேண்டாமிவ்வுலகை
மித்தையெனக்காண்குதல்போதும் விட்டுநீங்குமுடனெருங்கே
எத்தைவிடுதலெதைப்பற்ற லென்னிற்சீவத்துவமான
அத்தைவிடுகதனைநோக்கு மதைப்பற்றிடுகநெறியாகும்.

(இ-ள்.)—மாயாகாரியத்தை கொள்ளுதலும் நீக்குதலும் வேண்டுவதில்லை இந்தபிரபஞ்ச வியற்கையை பொய்யென்று பார்ப்பதேபோதும் (அங்கனங் காணில்) அக்கணமே அடியோடு ஒழிந்துபோம் (ஆயின்) எதைத்தள்ளுவது எதைக்கொள்ளுவது என்றல் சிதாபாசத்தன்மையை விட்டொழிக தன்னையறிவதைக் கொள்ளுக இஃதேமார்க்கமாம்.—எ-று. அச

இல்லமென்றுந்துறவென்று மெண்ணவேண்டாமற்றவையில்
அல்லனீங்கியொருநினைவா யசைவற்றிருந்துசொருபமதைச்
செல்லவிடையூறின்றி யதைச்சேர்ந்துநின்றுதன்னிலையைப்
புல்லவிடையூருகுமதைப் போக்கிவிடுகவேதானும்.

(இ-ள்.)—இல்லறமென்றும் துறவறமென்றும் நினைக்கவேண்டாம் அவற்றுள் அலைவின்றி ஒரேமனமாய் அசைவறநின்று பிரமத்தையடைய இடஞ்சலில்லாதநிலைமையைக் கூடிநின்று தற்சொருபத்தையடைய இடஞ்சலாகுநிலைமையை தானும் ஒழித்துவிடுக.—எ-று. அரு

விளக்குஞ்சொருபநோக்காது விளங்குமுலகைநோக்கியிடின்
விளக்குஞ்சொருபந்தோன்ருது விளங்குமுலகேதோன்றியிடும்
விளக்குஞ்சொருபந்தனைநோக்கி விளங்குமுலகநோக்கமறின்
விளக்குஞ்சொருபமேதோன்றும் விளங்குமுலகுமதுவாய்போம்.

(இ-ள்.)—பிரகாசிப்பிக்கின்ற பிரமத்தை பார்க்காமல் பிரகாசிக்கின்ற பிரபஞ்சத்தைபார்க்கில் பிரகாசிப்பிக்கின்ற பிரமம்தோற்ருது பிரகாசிக்கின்ற பிரபஞ்சமேதோற்றும் பிரகாசிப்பிக்கின்ற பிரமத்தைபார்த்து பிரகாசிக்கின்ற பிரபஞ்சத்தின் பார்வைநீங்கில் பிரகாசிப்பிக்கின்ற பிரமமே பிரகாசிக்கும் பிரகாசிக்கின்ற பிரபஞ்சமும் அதுவேயாகும்.—எ-று. அசு

தன்னைமறைத்தபந்தமதைத் தளளிநீக்கித்தனையறியில்
தன்னைவிடவோர்பொருளுமின்றித் தானேதானய்விளங்கியிடும்
தன்னையறியுமவ்வளவுந் தன்னைவிடவேறிலையென்றே
தன்னைநோக்கியொருநினைவாய்ச் சாதித்திடவேமிகவேண்டும்.

(இ-ள்.)—தற்சொருபத்தை மூடினபந்தத்தை ஒழித்து தற்சொருபத்தையறிந்தால் தற்சொருபத்தையன்றி ஒருவஸ்துவும் இலாமல் தன்மயமாய் பிரகாசிக்கும் தற்சொருபத்தை தெரியுமட்டுமே தற்சொருபத்தையொழிய அன்னியமில்லையென்று தற்சொருபத்தைபார்த்து ஏகசித்தமாய் மிகவுஞ்சாதிக்கவேண்டும்.—எ-று. அஎ

மூலவக்கரமதனில் மூன்றக்கரமுநின்றதுபோல்
நீலவுற்பலமதனி னிறமுன்மூன்றுநின்றதுபோல்
சீலமதனினோக்கியிடிற் சீவன்பரமிச்சகமூன்று
கோலமவையுஞ்சொருபமதாய்க் கூடிநிகழுமொன்ருயே.

(இ-ள்.)—ஓங்காரத்தில் அகர உகர மகர மென்னு மட்சரத்திரியமும் இருந்ததுபோலும் நீலோற்பலத்தில் நிறமுதலாகிய மூன்றுதன்மையும் இருந்ததுபோலும் பிரமசொருபத்தில் பார்க்குமிடத்தில் இந்த ஜெகஜீவபரங்களாகிய விசித்திரத்திரயங்களும் பிரமமாய் ஏகமாய் சேர்ந்து விளங்கும்.—எ-று

எல்லாமாகுந்தற்சொருப மிருக்குமளவுமாயையுமுண்
டில்லாமாயையுள்ளளவு மீசன்புரியும்பஞ்சதொழில்
இல்லாதொழிந்துபோவதில்லை யிதனூற்சீவபரமுண்டு
சொல்லாநின்றவிவர்க்குக்கரி சொருபந்தானேபகுத்துநிற்கும்.

(இ-ள்.)—சர்வமுமாகின்ற பிரமசொருபம் இருக்குமட்டும் மாயையுமுளது இல்லாதமாயை இருக்குமட்டும் ஈசுரன்செய்கின்ற பஞ்சகிருத்தியங்கள் இல்லாமல் நீங்கிப்போவதில்லை இவ்வகையினுல் சீவபரங்களுண்டு சொல்லுகின்ற இச்சீவேசுராளுக்கு சாட்சி தற்சொருபமே கூடஸ்தபிரமமெனப் பகுத்து பிரகாசித்து நிற்கும்.—எ-று. அக

பகுத்துநின்றதற்சொருபம் பரசீவருக்குச்சாட்சியதாய்ப்
பகுத்துநிற் தஞ்சாட்சியையே பார்த்துத்தத்தொமசியென்று
வகுத்துமாவாக்கியங்கூறு மற்றிச்சீவன்றனையல்ல
தொகுத்துகேட்டதிவனெனினுஞ் சொன்னதிவன்சாட்சியைப்பார்த்தே.

(இ-ள்.)—பிரித்துநின்ற பிரமசொருபம் சீவேசுராளுக்கு சாட்சியாக பிரித்துவிளங்கும் கூடஸ்தனையே ஆசிரியர்பார்த்து அது நீயாளுயென்றுபிறித்து மகாவாக்கியத்தை உபதேசிப்பர் இந்த சீவனைப்பார்த்தல்ல அடுத்துக்கேட்டது இச்சீவ னென்ருலும் சீவ சாட்சியாகிய கூடஸ்தனைப் பார்த்தே உபதேசித்தது.—எ-று. கo

இந்தச்சீவன்கற்பிதமே யின்றிவேறேர்பொருளல்ல
அந்தச்சொருபமிவனுகா னந்தச்சாட்சியொன்ருகும்
இந்தச்சீவனதுநாமென் றெண்ணிச்சோகம்பாவிக்க
அந்தச்சொருபமாயிடுவே னவனைவிடவேறிவனிலதின்.

(இ-ள்.)—இச்சீவன் ஆரோபிதமேயன்றி வேறொருவஸ்துவல்ல அப்பிரமசொருபம் இச்சீவனுகான் அக்கூடஸ்தன் ஐக்கியமாவன் இச்சீவன் பிரமமே கூடஸ்தனென்று நினைந்து சோகம்பாவனைசெய்ய அப்பிரமசொருபமேதாளுவன் அப்பிரமத்தையன்றி அன்னியமாய் இக்கூடஸ்தன் இல்லாமையால் (சீவேசுராளுக்க யிக்கமின்றெனவும்) பிரமகூடஸ்தருக்கே ஐக்கியமுண்டெனவுங் கூறினதாம்.—எ-று. கக

இதனாற்பந்தமுத்தியுமுண் டிதனாற்பந்தமுத்தியுமின்
றிதனான்முத்திபெற்றவனுண் டிதனான்முத்திபெற்றவனின்
றிதனாற்பலவேயாகியிடு மிதனாலொன்றேயாகுமெனும்
இதனாலவிரோதமதாகு மிதுவேநமதசித்தாந்தம்.

(இ-ள்.)—இவ்வகையால் பெத்தமுத்திகளுமுண்டு இவ்வகையால் பெத்த முத்திகளுமில்லை இவ்வகையால் முத்தியடைந்தவனுண்டு இவ்வகையால் முத்தியடைந்தவனில்லை இவ்வகையால் நானாவாகும் இவ்வகையால ஏகமேயாகும் என்று உபநிஷத்துக்கள் சொல்லும் இவ்வகையால் விரோத மின்மையாம் இம்மார்க்கமே நமது நிச்சயம்.—எ-று. கூஉ

இந்தநெறியிலனுதினமு மேகாந்தத்திலொருநினைவாய்ப்
பந்தமுத்திமார்க்கமதைப் பகுத்துவந்தவழிப்படியே
தொந்தமகற்றிப்பழையபடி சொருபமதனினின்றிடென
இந்தவகையேயருள்புரிந்தா ளெனையாள்விருத்தவம்பிகையும்.

(இ-ள்.)—இம்மார்க்கத்தில் சதா காலமும் ஏகாந்த ஸ்தானத்தி லிருந்து ஏகசித்தமாய் பெத்தமுத்தி வழிகளை பிரித்து உண்டான கிரமப்படியே தொடர்ச்சியையொழித்து முன்னிருந்ததுபோல பிரமத்தில் நிற்பாயென்று இவ்விதமாக என்னையடிமை கொண்டருளிய பெரியநாயகித்தாயாரும் கிருபை செய்தனள்.—எ-று. கூரு

## அனுபவமகிழ்ச்சி.

கோர்த்துப்பத்துத்திசைகளினுங் குலவும்பதினாலுலகத்தும்
பார்த்துநோக்குமிடமெல்லாம் பரமேநிற்கயானவமாய்
கூர்த்துநோக்கிப்பாராது கொடுமைகளிலேநாட்கழித்தேன்
ஈர்த்துவிருத்தவம்பிகையின் றிந்தோவென்றாள்யான்கண்டேன்.

(இ-ள்.)—நிறைந்து பத்துதிக்குகளிலும் பொருந்திய பதினான்குலோகத்திலும் பார்க்குமிடங்கடோறும் பிரமமே இருக்க நான் விருதாவாய் கூர்ந்து விசாரித்து பாராமல் தீமைகளில் வாணாளைக் கழித்தேன் பெரிய நாயகியார் இருந்து இழுத்து இதோ வென்றனுக்கிரகஞ் செய்தாள் நான் தரிசித்தேன்.—எ-று. கூச

கொக்குமிரைதேருதலினருட் குருவினருளிலியானுக்கத்
திக்குலோகமென்றதெல்லாந் தெரியவேண்டியுரைத்ததுவாய்த்
திக்குலோகமும்மிறந்து தேருமியானுமிறந்ததுவாய்
ஒக்குமுவமையில்லாத வொளியாயெங்குநிறைந்ததுவே.

(இ-ள்.)—குரண்டமும் இரை தேடுவது போல் குருகிருபையினால் நான் பார்க்க திசைகளுலகங்களென்னுஞ் சகலமும் அறியவேண்டி உபதேசித்தது போல் திசைகளுமுலகங்களுங்கரைந்து அறிகின்றதற்போதமுங்கரைந்து பிரமசொரூபமாகி சமானரகிதமான சுயம்பிரகாசமாய் எவ்விடத்தும் பரிபூரணமாக பிரகாசித்தது.—எ-று. கடு

அந்தோவந்தோவாளாவிவ் வனுபூதியினையறியாது
வெந்தோர்மயக்கிலகப்பட்டு வீணினாளைக்கழித்துவிட்டேன்
இந்தோபாரென்றருட்சத்தி யெனக்குங்காட்டநான்கண்ட
சந்தோடத்தைச்சொலப்படுமோ தானேதானின்றறிவதுவே.

(இ-ள்.)—ஐயோவையோவிருதாவில் இச்சுவானுபூதிப் பிரத்தியட்சத்தையறியாமல் கரிந்து ஓர் மோகத்திற்சிக்கி வீண் செய்கைகளில் வாணாளை போக்கிவிட்டேன் இதோபாரென்று சிற்சத்தியாகிய பெரிய நாயகியார் அடியேனுக்கும் தரிசிப்பிக்க நான் தரிசித்தனுபவித்த ஆனந்தத்தை சொல்லக்கூடுமோ தானேதானாயிருந்து தெரிகின்றது.—எ-று. கசு

எந்தனுடையசரித்திரங்க ளெனக்கேநகைவந்திடுநினைச்சில்
இந்தக்குறைகள்பாராம லெனையும்வலிவிற்பிடித்திழுத்துப்
பந்தமுத்திவிவகாரம் பறித்தேயெறிந்துபழையபடி
அந்தவெனதுநிலையில்வைத்த வன்னைக்கெனையோகைம்மாறே.

(இ-ள்.)—யோசிக்கில் என்வழிமுறைகள் எனக்குத்தானே சிரிப்பாணிவரும் இக்குறைபாடுகளை ஆய்ந்துபாராமல் அடியேனையும் பலாத்காரமாக பற்றியிழுத்து பந்தமோட்சவிவகாரங்களை ஒழித்து தள்ளி முன்னிருந்ததுபோல அழகிய என் சொரூபசுபாவநிலைமையில் இருக்கச்செய்த தாய்க்குயான்செய்யும் பிரதியுபகாரம்யாது.—எ-று. கஎ

எனதுவடிவையறியாம லிந்தவுயிராய்நின்றதுவும்
மனதுமிகவும்வாடினதும் வழிகாணுமலேங்கினதும்
தனதுகணிற்றோன்றிடுநெருப்பிற் றருவேவதுபோல்வெந்ததுவும்
தனதுகடைக்கண்ணாலொழித்த தாய்க்குமெனையோகைம்மாறே.

(இ-ள்.)—என் சொரூபசுபாவத்தை உணராமல் இச்சீவனாய் இருந்ததும் மனம் மிகுதியும் வருந்தினதும் மார்க்கமறியாமல் ஏக்கங்கொண்டதும் தன்னிடத்தில் உண்டாகின்ற அக்கினியால் விருட்சமும் எரிந்து போவது போல எரிந்ததும் தனது கடாட்ச வீட்சணியத்தினால் நீக்கிய மாதாவுக்கும் யான் செய்யும் பிரதியுபகாரம்யாது.—எ-று. கஅ

என்னையறியாதிதுவரையு மேங்கியுழன்றுகிடப்பேற்குத்
தன்னேர்கிராம்விருத்தகிரி தங்குமுமையேதயவாகிப்
பின்னையானுந்தானுமொன்றும் பிரமந்தனையேயறிவித்து
முன்னைமயக்கந்தனைக்கெடுத்த முதல்விக்கெனையோகைம்மாறே.

(இ-ள்.)—என் சொருபத்தை தெரியாமல் இந்நாள்வரையிலும் ஏக்க முற்று அலைந்துகிடக்கின்றவெனக்கு தனக்குத்தானே சமானமாகிய பழமலையின்கண் வசிக்கின்ற பெரியநாயகியாரே கிருபையாகி பிற்பாடு கூடஸ்தனும் பிரமமும் ஐக்கியமாகின்ற அத்துவிதானுசந்தானத்தையே தெரிவித்து முன் புள்ளமோகத்தை நசிப்பித்ததாய்க்கு யான் செய்யும் பிரதியுபகாரம் யாது.—எ-று. ௯௯

எழிலார்விருத்தாசலவடிவா மெந்தைவாழ்கவெனையாளும்
எழிலார்விருத்தவம்பிகையு மென்றும்வாழ்கவெனக்கருளும்
எழிலார்பிரணவமும்வாழ்க வென்றுயருளைநோக்கியிடும்
எழிலாரடியார்களும்வாழ்க வெனைப்போலெல்லோர்களும்வாழ்க.

(இ-ள்.)—அழகுபொருந்திய விருத்தகிரி சொருபமாகிய எமது பிதாவாகிய பரமசிவன் வாழக்கடவது என்னையடிமைக்கொண்ட அழகுபொருந்திய பெரிய நாயகித்தாயாரும் எப்போதும் வாழக்கடவது எனக்கனுக்கிரகிக்கும் அழகுபொருந்திய பிரணவ மந்திரமும் வாழக்கடவது எனது மாதாவாகிய பெரியநாயகியாரது கிருபையை நோக்குகின்ற அழகுபொருந்திய திருத்தொண்டர்களும் வாழக்கடவது என்போல சகலமானவர்களும் வாழக்கடவது.—எ-று. ௧00

## (நூற்பெருமைவேறு.)

ஏருரும்விருத்தகிரிக்குமார தேவெனுமுனிவனிசைக்குநாவாய்க்
காருரும்பழமலையிற்பெரிய நாயகியிருந்தேகழறுமிந்தச்
சீருருமத்துவிதவுண்மை யனுபவமுணர்ந்தோர்திகழ்பாரென்னுந்
தேருருஞ்சிவனுனைமுத்திபெற லுண்மையிதுதிண்ணந்தானே.

(இ-ள்.)—அழகு பொருந்திய பழமலையின் கண் ணெழுந்தருளி யிருந்த ஸ்ரீகுமாரதேவரென்னு நாமதேயத்தையுடைய முனீஸ்வரர் சொல்லுகின்ற நாவினிடத்து மேகந்தவழுகின்ற விருத்தாசலத்தி லெழுந்தருளி விளங்குகிற பெரியநாயகித்தாயார் வீற்றிருந்தருளி சொல்லுகின்ற இந்த சிறப்பையுடைய

அத்துவிதவுண்மையென்னு நூலின் அனுபூதியை அறிந்த பெரியோர்கள் பிரகாசிக்கின்ற பூமியென்கின்ற ரதத்தை நடாத்துகின்ற சிவாக்கினைப்படி மோட்சமடைவது சத்தியம் இஃது உறுதிவசனந்தான்.—எ-று. ௧௦௧

## அத்துவிதவுண்மைமூலமும் பொழிப்புரையும்

முற்றிற்று.